# சிவாஜி





1970 மார்ச். பங்குனி-சித்திரை




ஆண்டு : 35 | மார்ச் 1970 | இதழ் : 3





**ஆண்டுக் கட்டணம் ரூ. 10**

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 4848)

# இலக்கியப்பரிசு

உயிர்வாழும் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் நம்பிக்கையும் உதவவே, சாகித்ய அகாடமியாரின் பரிசுத் திட்டங்கள் உள்ளன வென்றுதான் சாதாரணமாக யாரும் எண்ணியிருப்பார்கள். பரிசுக்கு பிரஸ்தாபிக்கப்பட்ட கலைஞர்கள் பரிசு பரிசீலனையிலிருக்கும்போதே ஒருவேளை காலமாகிவிட்டால், பின்னர் அவர் பெயரால் வழங்கப்படுவதும் அவசியமே. பாரதிதாசனுக்கு இவ்வாண்டு வழங்கப்பட்டமுறை எந்த அடிப்படையில் என்பது விளங்கிக்கொள்ளமுடியாத புதிராகவே இருக்கிறது.

கவிஞர்கள் புகழுடம்பெய்திய பின்னரே போற்றற்குரியவர்கள் என்ற மரபை வலியுறுத்துவது போன்று, கவியரசர் பாரதிதாசனுக்கு இவ்வாண்டு இலக்கியப்பரிசை சாகித்ய அகாடமி வழக்கியிருக்கிறது. அவர் உயிர் வாழ்ந்த காலத்தில் அவருடைய இலக்கிய மாண்பை அறியவியலாதுபோன சாகித்ய அகாடமி அவர் நம்மிடை இல்லாத இந்நாளிலேனும் அவரது சிறப்பை உணர்ந்துகொண்டதே என்பதுபற்றி நாம் பாராட்ட வேண்டும்.




மாதவம் சிறந்து
மானிடம் உயர்க.

# நில வரம்பு

முப்பது ஏகராவாக இருந்த நிலவரம்பைப் பதினைந்தாக்கியிருக்கிறது தமிழக அரசு. இதன்மூலம் உற்பத்தித் துறையில் ஊக்கம் உண்டாவதற்குப்பதில் ஏக்கமே பெரிதும் உண்டாகும். நிலம் என்பது இனி ஒரு உடைமையல்ல என்ற உண்மை மலியும். தொலைநோக்கு சிறிதுமின்றி, கோஷங்களைப் போற்றும் அரசாங்கப்போக்கு, மத்தியில் மட்டுமின்றி, மாநிலத்திலும் காணப்படுவது மக்களுக்கு அயர்வையே தரும். இதனால் எத்துணை குடும்பங்கள் எத்துணை சீர்குலைவுகளுக்கு ஆளாயின என்பதை ஆளுக்கு ஒரு ஏகராவே வரம்பென்று வகுக்கும்போது தெரிந்துகொள்வோம்.

# தேசீய பரம்பரை

விடுதலை வந்தபிறகு இந்தச் சொல்லுக்குப் பொருள் கிடையாது. ஏனென்றால் அது அன்னிய ஆட்சிக்கு எதிராக மார்தட்டிய மக்கள் கூட்டத்தையும் அவர்தம் வழிவந்தோரையும் குறிப்பது. காங்கிரஸ் உடைந்தபிறகு இந்தப் பரம்பரைப் பெருமையை இனியும் பேணுவதன்மூலம் பயனில்லை என்பதை அரசியல் வாதிகள் தெளிவாகப் புரிந்துகொண்டிருப்பார்கள். இனி நாட்டுக்கு எதிரான காரியங்களில் ஈடுபடும் துரோக பரம்பரையினரைத்தான் இனங் கண்டுகொள்ள வேண்டும். இந்த விழிப்பே விடுதலை பெற்ற வாழ்வை மீண்டும் இருளில் ஆழ்த்தாது தற்காத்துக்கொள்வதாகும்.

## அன்னை கஸ்தூரிபாய்

கஸ்தூரிபாய் காந்தி இந்தியாவில் வாழும் எல்லோருடைய இதயத்திலும் உயரிய இடத்தைப் பெற்றிருக்கிறார். இந்திய மாதர் குலம் போற்றிவரும் சீரிய லட்சியங்களின் சின்னமாக விளங்கியவர் அவர். கஸ்தூரிபாய்க்கு ஏட்டுப் படிப்பு இல்லை; அவர் அறிவாற்றல் பெற்றவரும் அல்ல. ஆயினும், புகழின் உச்சநிலையை அவரால் அடையமுடிந்தது.

போர்பந்தரில் 1869-ம் ஆண்டில் பிறந்த கஸ்தூரிபாய் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தியை 1883-ம் வருடத்தில் கடிமணம் புரிந்தார். தமது எழுபத்தியேழாவது வயதில், 1944 பிப்ருவரி 22-ம் தேதி அவர் மறைவுற்றார்.

எல்லோரும் அவரை 'பா' என்று அன்புடன் அழைத்தனர். உண்மையிலேயே, காந்திஜி உட்பட அனைவருக்குமே அவர் அன்னையாக விளங்கினார். அன்னை என்னும் முறையில் அவரது பணி தென் ஆப்ரிக்காவில் ஃபோனிக்ஸ் ஆஸ்ரமத்தில் ஆரம்பமாயிற்று; இத்தப் பணி இந்தியாவில் சபர்மதி ஆஸ்ரமத்திலும், சேவாக்ராமம் ஆஸ்ரமத்திலும் தொடர்ந்து நடைபெற்றது. அவரது அடக்கமான சுபாவமும் தியாக உணர்வும் அவருக்கு மட்டுமின்றி காந்திஜிக்கும் புகழைத் தேடித் தந்தன.

அவரது மறைவுதினமான பிப்ருவரி 22-ந் தேதியுடன் இந்தியாவில் காந்திஜி நூற்றாண்டு விழா முற்றுப் பெறுகின்றது. ✻

# காால்டுவெல் ஐயர்

தொடர்ச்சி : 4 — நீ. கந்தசாமி பிள்ளை

இந்த இருபது ஆண்டுகளில் (1856-1876) மேல் நாட்டு அறிஞர்கள் தமிழ் மொழிக்குச் செய்துவந்த தொண்டுகளும் குறைவனவாயின. ஆனால், இரண்டு சிறந்த வெளியீடுகள், அவர்களால் வந்துள்ளதை தமிழகம் என்றும் மறக்க முடியாது. யாழ்ப்பாணத்தில் பல காலமாக, நைட் (Rev. J. Knight) ஸ்பால்டிங் (Rev. L. Spaulding) முதலிய, கிறிஸ்தவ சமயத் தொண்டர்கள் தொகுத்துவைத்திருந்த தமிழ் அகராதிக்கு வேண்டிய சொற்களையும் விளக்கங்களையும், வின்ஸ்லோ (Rev. M. Winslow) என்பவர் சென்னைக்குக் கொண்டுவந்து, மிக முயன்று, ஒரு, தமிழ் – ஆங்கில அகராதியை நன்முறையிற் பதித்து, 1862-ஆம் ஆண்டு ஜூலை மாதம் வெளியிட்டார். இது, வின்ஸ்லோ அகராதி என்று பெயர் பெறும்; அமரிக்காவில் வெளிவந்த வெப்ஸ்டர் (Webster) ஆங்கில அகராதி போன்று, அக்காலத்தில் தமிழுக்கு விளங்கியது. தமிழ் மொழியின் சிறப்பை வின்ஸ்லோ குறித்திருந்தது எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்தது. இந்த அகராதி வேலையில், இவருக்குத் துணையாகச் சில காலம், பர்சிவல் (Rev. P. Percival) இருந்தார். இராமாநுசக் கவிராயர், விசாகப்பெருமாள் ஐயர், வீராசாமிச் செட்டியார் முதலிய சிறந்த தமிழ்ப் புலவர்கள், சென்னையில், இவ்வேலையில் கலந்துகொண்டிருந்தார்கள். இது, காலத்துக்கேற்பப் பதிக்கப்பெறின், எக்காலத்தும், தமிழ் மொழிக்கு ஒரு சிறந்த அகராதியாகத் திகழும் சிறப்புடையது என்பதை எவரும் மறுக்கார்.

மற்றொரு சிறந்த நூல், பர்னல் (Dr. A. C. Burnell) என்பவருடைய 'தென்னிந்திய பண்டைய எழுத்துக்கள்' (Elements of South Indian Palaeography) என்னும் அரிய நூல்; இந்த நூல், நாம் பேசும் காலத்திலேயே எழுதப்பெற்றிருந்தும் 1878-ஆம் ஆண்டுதான் வெளிவந்தது. தமிழ் எழுத்துக்களின் வரி வடிவை, மிகத் தெளிவாக ஒவ்வொரு நூற்றாண்டிலும் இருந்தவண்ணம், அழகாகக் காட்டியிருந்தார். இதன் முகவுரை ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ளவேண்டிய, தென்னாட்டைப் பற்றிய, பல செய்திகளை வரையறையுடன் குறிப்பிட்டிருந்தது. பர்னல், 1840-ஆம் ஆண்டில் பிறந்தவர்; கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் தேர்ச்சிபெற்று அரசாங்க வேலையை மேற்கொண்டு 1860-ஆம் ஆண்டில் சென்னைக்கு வந்தவர், தென்னாட்டு மொழிகளிலும், பழஞ் செய்திகளிலும், கல்வெட்டு, பண்பாடு முதலியவற்றிலும் ஈடுபட்டுப் பல அரிய வேலைகளைச் செய்தார். தஞ்சையிலேயே பல ஆண்டுகள் வேலைபார்த்தார். தஞ்சை சரபோஜி மன்னரின் நூல் நிலையத்திலுள்ள சமஸ்கிருத நூல்களுக்கு இவர் தொகுத்த அட்டவணை, யாவராலும், உலக முழுதும் புகழப்படுகின்றது. பரந்த நூற்பயிற்சியில், நுண்ணிய அறிவில், உள்ளத்தோடு உழைக்கும் தன்மையில், உண்மையைக் காணும் வேட்கையில் எவர்க்கும் எடுத்துக்காட்டாக நின்றார். பல அரிய கட்டுரைகள் எழுதி, தென்னாட்டின் உயர்வை, உலகம் அறியச் செய்தார். ஐந்திரவியாகரணத்தைப்பற்றி ஒரு கட்டுரை எழுதிச் சில இலக்கண நெறிகளைக் காட்டினார். தஞ்சையில் இலக்கணவாசிரியர், மருதமுத்து உபாத்தியாயரிடம் தமிழ் பயின்றார்; இவ்வாசிரியரே, போப் தஞ்சையிலிருந்தபோது, அவருக்குத் தமிழ் பயிற்றியவர். அக்காலத்தில், இலக்கண முறை

களை, இரண்டு வகையாக, ஒரு சார் தமிழறிஞர்கள் கருதினர்கள். ஐந்திர முறை ஒன்று, பாணினி முறை மற்றொன்று. தொல்காப்பியம் முன்னையதைச் சார்ந்த தென்றும், நன்னூல் பின்னையதைச் சார்ந்ததென்றும், ஒரு எண்ணம் இவர் களிடம் பரவிவந்தது. சில இலக்கண வாசிரியர்களும் இருவகையாகப் பிரிந்து கொண்டனர். மருதமுத்து உபாத்தியாயர் முன்னைய பிரிவைச் சேர்ந்தவர். இவ் வகைப் பிரிவு எல்லோராலும் கொள்ளப் பட்டதல்ல. பர்னலுடைய கருத்துக்களில் ஒன்று, தென்னாட்டில் தோன்றிய அரிய எண்ணங்களெல்லாம், வடநாட்டை வசப் படுத்திப்புகுந்து, பின்னர் வடநாட்டுக் கருத்துக்களென உலகெங்கும் பரவ லாயின என்பது. தமிழ்நாட்டிலுள்ள கோயில்களின் அமைப்பையும் சிற்பச் சிறப்பையும் பார்க்கும்போதெல்லாம் 'கோயில்கள்' இங்கு இருக்கின்றன; ஆனால் இவைகளை அமைக்கும் முறை களைக் கூறும் நூல் தமிழில் இல்லை; அத் தகைய நூல்கள் சமஸ்கிருதத்திலுள்ளன; ஆனால் அவைகட்கேற்ற கோவில்கள் அங்கில்லை; இலக்கியம் தெற்கே இருக் கின்றது; இலக்கணம் வடக்கே இருக் கின்றது, காரணம் என்ன?' என்று அடிக் கடி கேட்பதுண்டு என, அவரிடம் சில நாட்கள் வேலைபார்த்த என் தந்தையார் சொல்லுவார்கள். தமிழ்ப் பெயர்கள் சமஸ்கிருதப் பெயர்களாக மாற்றப்பெற்ற முறைகளை நான்கு வகையாக இவர், பிரித்துக் காட்டினர். முதலாவது தமிழ்ப் பெயர்களை நேரே சமஸ்கிருதத்தில் மொழி பெயர்ப்பது: மறைக்காடு: இடைமருது, என்பன வேதாரண்யம், மத்யார்ச்சுனம் என மாறியதுபோல், மொழிபெயர்க்கும் போது பொருளறியாமல், பொருளைப் பிழைபடக்கொண்டு மொழி பெயர்த்தல்; அரிசில்கிழான் வெட்டிய ஆறு அரிசா லாறு என்பதை அறியாமல் அரிசில் என் பதை அரிசி எனப் பிழைபடக்கொண்டு அர்ஜீலநதி என மொழிபெயர்த்தல்; வெட்டாறு என்பதை வட்டாறு எனக் கொண்டு விர்த்த நதி என்றல்; விண்ணன் வெட்டிய ஆறு விண்ணாறு என்பதறியாது வெண்ணாறு எனக்கொண்டு ஸ்வேத நதி எனல். இரண்டாவது, தொகையாக வரும் பெயர்களை ஒரு பகுதியை மொழி பெயர்த்து மற்றொரு பகுதியை ஒலி பெயர்த்தல்: அண்ணாமலை என்பதை அர்ண-அசலம் எனல். மூன்றாவது, புராணங்களில் வரும் பெயருக்கேற்ப ஒலிகளை மாற்றி வடமொழிக் கதைகளோடு தொடர்புபடுத்தல்: திட்டை என்ற ஒலியை வசிஷ்ட என மாற்றல்; இராஜ இராஜபுரம் என்பதின் மரூஉவாகிய தாரா புரம் என்பதை தாருகன் என்னும் அசுர னோடு இணைத்து தாராசுரம் எனல். நான் காவது, இயல்பாகவுள்ள பெயரோடோ அல்லது அங்குள்ள தெய்வப் பெய ரோடோ, ஸ்தலம், புரம் என்பவற்றைச் சேர்த்தல். பல பழஞ் செய்திகளையும் சொற்களையும் தெரிந்துகொள்ளுவதற்குப் பயன்பெறுவதான ஹாப்ஸன் ஜாப்ஸன் (Hobson Jobson) என்ற ஒரு நூலை யூல் (Sri H Yule) என்பவருடன் சேர்ந்து தொகுத்தார். அந்நூல் 1886–ஆம் ஆண் டில்தான் வெளிவந்தது. 'ஹாப்ஸன் ஜாப்ஸன்' என்னும் சொல், இப்போது மொழி நூல் குறியீடுகளில் ஒன்றாய் ஒலிச் சிதைவின் ஒரு முறையைக் குறிப்பிடு கின்றது. இவர் இளமையிலே, நாற்பத் திரண்டாவது வயதில் காலமாகிவிட்டார். இவர் தொகுத்திருந்த சுவடிகளை யெல்லாம் இந்தியா ஆபீஸ் நூல் நிலையத் தில் சேர்த்துவிட்டார். எல்லீசும், பர்ன லும் சில ஆண்டுகள் உயிரோடு இருந் திருப்பார்களானல் தமிழும் தமிழ் நாட்டு வரலாறும் இன்னும் பல விளக்கம் அடைந் திருக்கும்.

அக்காலத்தில், அரசாங்கத்தாரின் கல்விப் பகுதியார் தமிழ் வளர்ச்சிக்குச் செய்ததாகச் சிறப்பித்துக் கூறக்கூடியது ஒன்றுமில்லை. சென்னை, நாட்டுமொழிப்

புத்தகச் சங்கத்தாரால், 1870-ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று, இருபது ஆண்டுகள் தொடர்ந்து நடந்துவந்த 'ஜநவிநோதினி' என்னும் திங்கள் வெளியீடு சிறப்பாகக் கருதத்தக்கது; அதில் வெளிவந்த கட்டுரைகளும், படங்களும் மக்கள் அறிவை வளர்ப்பதற்குப் பெரிதும் பயன்படுவன. உரைநடை, சிறந்ததெனக் கூறக்கூடியதல்லவெனினும், தெளிவுடையது. தமிழ் வழியாகவே பல வகைப்பட்ட அறிவையும் அடையக்கூடும் என்பதற்கு, அது ஒரு எடுத்துக்காட்டு எனக்கொள்ளலாம். அக்கால உரை நடை எவ்வாறிருந்ததென்பதற்கு, அப்பாடசாலையில் 1841-ஆ பிரவேசித்து, மாதவராயர், அப்போது அப்பாடசாலைக்கு அத்தியக்ஷராயிருந்த மேஸ்தர் பவல் துரையவர்களுடைய கற்பனையினால், மிகத்தேர்ச்சி பெற்று, அதில் முதல்தரமாய் தேறினவர்களுள் தாமும் ஒருவராகி, அங்கு அதற்கேற்ற வெகுமதியும் பெற்றார். அவர் அப்பாடசாலையைவிட்டு நீங்கும்பொழுது பவல்துரை அவர்க்கு யோக்கியதா பத்திரிகையொன்று அளித்தார். அதைக் கேட்டால் அனைவரும் ஆனந்திக்கும்படியாகும். அதன் கருத்தாவது: 'த மாதவராயருக்கு உள்ள கல்வித்திறம் இந்தியாவில் அநேகமாய் எந்த வாலிபர்க்கும் இல்லையென்னலாம். கணித சாஸ்திரத்திலும் பவுதிக சாஸ்திரங்களிலும் இவருடைய சாமர்த்தியம் மிகவும் அதிகமானது. இந்த விஷயங்களில் இவர்க்குள்ள சாமர்த்தியம் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையிலுங்கூட இவர்க்கு ஒரு கவுரவமான பதம் கிடைப்பிக்கத்தக்கதாய் அவ்வளவு சிறந்திருக்கின்றது... மேலும் மாதவராயருடைய குணங்களும் நடவடிக்கைகளும் பெருந்தன்மையுடையவையாகவேயிருக்கின்றன. ஆதலின் இனி இவர்க்கு இவ்வுலகில் இதற்கேற்ற சிறப்பு உண்டாகுமென நான் உறுதியாக நம்புகிறேன்' என்னும் சொற்றொடர்களைப் பார்க்கலாம். எத்தனையோ பழைய நூல்களை மறுமுறையும் பதிப்பிக்கும் இக்காலத்தில் இந்த 'ஜநவிநோதினி' இருபது புத்தகங்களும் வருமாயின், தமிழ் மக்களுக்கு ஒரு நல் விருந்தாகும்.

அக்காலம், மரபாக வந்த தமிழ்க் கல்வியின் மாலைக்காலம் என்றே சொல்லலாம். பழமையான முறையைக் காப்பாற்றிப் பரவச் செய்துகொண்டிருந்தது ஒரே ஒரு பல்கலைக் கழகந்தான். இக்கழகத்திற் பயின்ற மாணவர்களே சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலும் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் தமிழாசிரியராகவும், நாட்டுப்புறங்களில் தனிப்பட நின்று தமிழ் பயிற்றுவோராகவும், தமிழையும் தமிழ்ப் பண்பையும் உண்மை நிலையில் நிலைக்கச் செய்துகொண்டிருந்தார்கள். எந்த இடத்தில் தமிழ் பயின்றவர்களாயினும், இக் கல்லூரியின் நிழலில் சில நாள் தங்கிய பின்னர்தான் தகுதியுடையவர்களாகத் தங்களை எண்ணிக்கொண்டார்கள். உலகமும் அவ்வாறே கருதியது. அப்பல்கலைக் கழகந்தாம் ஒரே இடத்தில் ஊன்றியதாக வில்லாது நாடெங்கும் உலவுவதாக விருந்தது; உயிரற்றதாகவில்லாது உயிருடையதாக விருந்தது. அது எது? அதுதான் மகா வித்வான் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை. அவருடைய மாணாக்கர்களே சென்னை மாநிலக் கல்லூரியில், பயிற்சிக் கல்லூரியில், குடந்தைக் கல்லூரியில், தஞ்சைக் கல்லூரில், திருவனந்தபுரம் கல்லூரியில், இன்னும் பல கல்விச் சாலைகளில், தமிழாசிரியர்களாகவிருந்த, புரசை பொன்னம்பல முதலியார், சுப்பராயச் செட்டியார், தியாகராசச் செட்டியார், ஐயாசாமிப் பிள்ளை, சாமிநாத தேசிகர், முதலிய பெரும்புலவர்கள். பிள்ளையவர்களது கூட்டம் என்றால் தமிழ்ப்புலமை மட்டுமல்ல, தமிழ்ப் பண்பும் நிறைந்த கூட்டம். சீலத்தால், நோன்பால், செறிவால், அறிவால் சிறந்த கூட்டம். ஆசிரியர்களுக்கு மாணாக்கர்களிடமிருந்த தாயனைய அன்

பும், மாணாக்கர்களுக்கு ஆசிரியர்களிடமிருந்த நன்றியும் வணக்கமும் கொண்ட பணிந்த அன்பும், உடன்பயின்ற மாணவர்கள் ஒருவருக்கொருவரிடத்திலுள்ள உள்ளங்கலந்த உலையா அன்பும், அப் பேரறிஞர் கூட்டத்தில் நிறைந்திருந்தது. இந்தக் கூட்டத்தால், தமிழ் கற்றவர்களுக்கு நாட்டிலிருந்த நன்மதிப்பு நிலை பெற்றிருந்தது. மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் 'நாம் இறைவனிடம் ஏதேனும் ஒன்று பெறவேண்டுவோமானால், நம் வித்வான் தாண்டவராயத் தம்பிரானை மீண்டும் பெறவேண்டுவோம்' எனக் கூறினார் என்றால் தமிழ்ப் பண்பு எத்தகையது? அக்காலத்தில், குடந்தைக் கல்லூரியில் தியாகராயச் செட்டியாரிடம் தமிழ்பயின்ற, தஞ்சை ராவ்பகதூர் சீநிவாசம் பிள்ளை 'உலகத்தில் பலவாறு அலைப்புண்டு வறண்ட உளம் குளிர்வதற்கு, எங்கள் ஐயா (தியாகராய செட்டியார்) வின் உருவத்தையும் உரையையும் நினைப்பேன்' என்பார். சீநிவாசம் பிள்ளையும், குடந்தை திவான் பகதூர் இராமாநுஜாச்சாரியாரும், செட்டியாரவர்களைப்பற்றியும் அவருடைய தமிழ் வகுப்பைப்பற்றியும் ஒரு நாள் பேசிக்கொண்டிருந்த மகிழ்ச்சியை இன்று எண்ணும் உள்ளமும் மகிழ்கின்றது.

தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்து
உம்ப ருறைவார் பதி.

என்ற வேளாண் வேதம் பொய்யாத காலம் அது. 1876ஆம் ஆண்டு மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தன் மாணவர் கூட்டத்தைத் தமிழ்ப்பணியைத் தொடர்ந்தாற்றுமாறு நல் வாழ்வில் வைத்து மறைந்தார்.

அக்காலம், இலக்கணத்துறையில், மாணவர்களுக்கான இலக்கண நூல்கள் வெளிவந்தனவேயன்றி, சிறப்புடையதாகக் கூறத்தக்கதொன்றுமில்லை. உறையூர் முத்துவீர உபாத்தியாரும், திருவாவடுதுறையைச் சேர்ந்த சாமிநாதக் கவிராயரும் பழைய முறையில் எழுதிக் கொண்டிருந்தார்கள். முன்னையது சூத்திரங்களாகவுள்ளது; பின்னையது விருத்த யாப்பில் அமைந்தது. முத்து வீரியம் வெளிவந்துள்ளது; சாமிநாதம் முழுதும் வெளிவரவில்லை; அண்மையில் வரலாம். (தஞ்சை சரஸ்வதிமால் நூல் நிலையத்தில், வித்வான் கோவிந்தசாமிப் பிள்ளை ஏடுகளைப் பார்த்து வருகின்றார்.)

கால்டுவெல், கிறிஸ்தவசமயத்துக்குச் செய்த அளப்பருந் தொண்டினை வியந்து போற்றிய அச்சமயத் தலைவர்களும், சங்கங்களும் இவரைப்பாராட்டவேண்டி, இவர் நிலையை 'போதகர் தலைவராக' (Bishop) உயர்த்தினார்கள். சீலத்தால், அத் தலைமைக்குரிய பண்புகளெல்லாம் நிறைந்த இவரைக் கோலத்தாலும் அணி செய்தார்கள். 1877ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், கல்கத்தாவில், போதகர் தலைவர் பலரும் பெருங்கோயிலில் கூடிய ஒரு சமயக்கூட்டத்தில், இந்தியாவின் போதகர்மாத்தலைவரிடம், போதகர் தலைவர் என்ற பட்டமும், அதற்குரிய ஆடை அணிகலன் முதலிய சின்னங்களும் பெற்றுத் திரும்பினார். இவருடைய சமயப் பணியை வியந்த தர்ஹாம் (Durham) பல்கலைக்கழகம் இவருக்கு 'தெய்வநூலறிஞர்' (D.D.) என்னும் பட்டம் கொடுத்துப் பாராட்டியது. அந்த ஆண்டு, தமிழகத்தை ஒரு கொடிய பஞ்சம் அலைத்தது; அதன் கொடுமையைக் குறைக்க அரசாங்கத்தார் மேற்கொண்ட நற்பணியில் இவரும் கலந்து உழைத்து மக்களது அன்பை மேலும் பெற்று மகிழ்ந்தார்.

இவர், பொதுவாகக் கல்விக்கும், சிறப்பாகத் தென்மொழிகளுக்கும் செய்துள்ள சிறந்த தொண்டை உளங்கொண்ட சென்னைப் பல்கலைக்கழகத்தார், அக்கழகத்தின் இருபத்திரண்டாவது ஆண்டு விழாவில், பட்டம்பெறும் மாணவர்களுக்கு

அறிவுரை வழங்குவதற்குத் தேர்ந்தெடுத்தார்கள். 1879ஆம் ஆண்டு நடைபெற்ற அவ்விழாவில், அறிவுடையோர் ஒவ்வொருவரும் தங்கள் நாட்டின் பழைய நிலையை நன்குணரவேண்டுமென்பதையும், பலமொழிகளையும் பயின்று மொழியியல் உணர்வதற்கு, திராவிட மொழிகளுக்குத் தாயகமாய், பதினுன்கு பெருமொழிகளும் முப்பது குறுமொழிகளும் பயிலும் சென்னைப் பல்கலைக்கழக எல்லையிலுள்ள இடங்களிலும் சிறந்ததோர் இடம் எங்கும் இல்லை என்றும்; இத்திராவிடமொழிகளுடன், ஆரியம், ஆங்கிலம், இந்துஸ்தானி மொழிகளும் இங்கு இயல்பாகவே பயிலக் கிடக்கின்றனவென்றும், இலக்கண அறிவின் நுண்மையில் இந்தியரினும் சிறந்தார், பண்டும் இன்றும் எங்கும் இலர் என்றும், இவர்களுடைய அறிவின் நுட்பத்திற்கு இலக்கண அறிவும், உள்ளத்தின் நேரியவளர்ச்சிக்கு பண்பமைந்த மொழிகளுமே அடிப்படையாகவிருக்கின்றனவென்றும், பல மொழிகளை ஒத்துப்பார்த்து அறிவியல் வரையறைகளுடன் மொழியைப்பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளவேண்டும் என்றும், பல அரிய கருத்துக்களும், கொண்டொழுகவேண்டிய நெறிகளும் பொதித்த ஒரு பேருரையை நிகழ்த்தினர். இப்பேருரை நிகழ்வதற்குச் சில திங்களுக்கு முன்னர், மச்சேறித் தூங்கி மங்கிய பல நூல்களையும் அச்சேறுவித்தவரும், எளிய நூல்களாலும், சொற்பொழிவுகளாலும், சைவசமயத்தை மக்கள் உணர்ந்து பின்பற்ற அரிய பணிகள் செய்தவரும் சைவத்தொண்டரும் தமிழ்த்தொண்டருமாய்த் திகழ்ந்த ஆறுமுக நாவலர், ஏட்டுச்சுவடிகளை அச்சேற்றும் பொறுப்பை சில காலம், சென்னை மாநிலக் கல்லூரியின் தமிழாசிரியராகவிருந்தவரும், சென்னைப் பல்கலைக்கழகத் தேர்வுகள் தோன்றிய முதலாண்டிலேயே கலைமாணிப் (B. A.) பட்டம் பெற்றவரும், அப்போது அரசாங்க அலுவலிலிருந்தவருமான தமிழ்ப்பேரறிஞர் சி.வை. தாமோதரம் பிள்ளையிடம் ஒப்புவித்து, விட்டு, தமிழகம்

> "வேதம்வலி குன்றியது மேதகுசி வாகமவி
> தங்கள்வலி குன்றினவடற்
> சூதன்மொழி மூவறுபு ராணம்வலி குன்றியது
> சொல்லரிய சைவசமயப்
> போதம்வலி குன்றியது பொற்பொதிய மாமுனிபு
> கன்றமொழி குன்றியதுநம்
> நாதனிணை ஞாலமிசை நாடறிய ஆறுமுக
> நாவலரடைந்த பொழுதே"

என இரங்கி ஏங்க மறைந்தார்.

கால்டுவெல், முப்பத்துமூன்று ஆண்டுகளுக்கு முன்னர், கால்கோள் விழா எடுத்த திருக்கோயில், 1880-ஆம் ஆண்டில், எல்லா உறுப்புக்களும் இனிது அமைந்து முற்றுப்பெற்றது. இக்கோயில் கட்டுவதற்குப் பொருளுதவி செய்தாரையும், பணி செய்தாரையும் இறைவன் அருள்பெறுமாறு வாழ்த்தி, இப்பெருங்கோயிலின் ஒலி மணி பல்லாயிரம் மக்களை அழைக்க, ஆண்டவனுக்கு உரிமையாக்கினர். இத்திருக்கோயில், செம்மணற்பாலையில், இவருடைய உலையா ஊக்கத்தையும் உண்மைப் பற்றையும் காட்டும் வெற்றித்தூணம்போல் நின்று பல்லாயிரம் மக்கள் ஆண்டவனை வழிபட்டு அருள் பெறுதற்கேற்ற நிலையமாகத் திகழ்கின்றது.

1881-ஆம் ஆண்டில், இவர், நீண்ட நாட்களாகச் சேர்த்தும் ஆய்ந்தும் வைத்திருந்த பழைய வரலாற்றுச் செய்திகளையெல்லாம் வெளியிடும் வாய்ப்புக் கிடைத்தது. அரசாங்க ஆதரவில் 'திருநெல்வேலி மாவட்ட வரலாறு' என்று ஒரு வரலாற்று நூல் வெளியிட்டார். அவ்வரலாற்றிறும் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளில் நிகழ்ந்தனவற்றை ஒருவாறு தொகுத்துக் கூறினர். ஸ்ட்ருபோ (Strabo) என்னும் வரலாற்றுசிரியர், கி. பி. முதல் நூற்றுண்டின் முற்பகுதியில் பேசுகிற, அகஸ்த்தஸ் சக்ரவர்த்தி (Emperor Augustus) யிடம் வந்த இந்திய அரசாங்கத் தூதர்கள் பாண்டியர்களால் அனுப்பப்பட்டவர்களே

என்பதையும், அலக்சாந்தர் என்னும் பேரரசனுல் (Alexander, the Great) தொடங்கப்பெற்ற இந்தியத் தொடர்பு வடநாட்டு மன்னர்களால் கைவிடப்பெற்ற பிற்காலத்தில், மேல்நாட்டுத் தொடர்பின் பயனை உணர்ந்து தொடர்ந்து காற்பாற்றியவர்கள் பாண்டியர்களே என்பதையும் அக்காலத்திய முத்து வாணிபத்தையும் நன்கு விளக்கியுள்ளார். பழங்காயலுக்கு அருகே கிடைத்த பொற்காசுகள், பதினுன்காம் நூற்ருண்டுக்கு முற்பட்டவை என்பதையும் அவற்றுள் ஆரகன் மன்னன் பீட்டர் (Peter of Aragon) என்பவனது காசுகள் இருப்பதையும், காயற்பட்டினத்து அக்காலத்து நடந்த வாணிகத்தின் சிறப்பையும், விளக்கமாக எழுதியுள்ளார். இந்த நூலை எழுதும்போது தான் ஒரு தமிழனுகவே உணர்ச்சிகொண்டு எழுதுகிருர் என்பது மட்டுமல்ல, தான் ஒரு நெல்லை நாட்டவராகவே எழுதுகிருர். சிறந்த தமிழ்ப் புலவர்களை எல்லாம் நெல்லை நாட்டவராகவேகொள்ள ஆசைப்படுகிருர். வீரமாமுனிவரை நெல்லை நாட்டுக்கு உரியவராகக்கொள்வதற்கு இவர் மன்ருடுவதைப் பார்க்கும்போது நமக்கே மனம் இரங்குகிறது; 'நெல்லை நாட்டில்தான் வீரமாமுனிவர் முதன்முதல் ஐந்தாண்டுகள், ஏன் ? ஏழாண்டுகள் தங்கித் தமிழ் பயின்ருர், ஆகையால், அவரைத் தமராகக்கொள்ள நெல்லை நாட்டுக்கு உரிமையுண்டு' என்கிருர். எவ்வளவு அன்பிருப்பினும், உண்மையிலேயே உரைத்த உள்ளமானபடியால், என்ன செய்வது, அவர், ஒரு செய்யுளோ உரைநடையோ, நெல்லையிலிருந்து எழுதவில்லையே?' என்று கூறி விட்டுவிடுகின்ருர். வரலாறுகளை நன்கு ஆய்ந்து, ஒரு முடிவுகட்டும் திட்பத்தை, மதுரை நாயக்கர்கள் ஆட்சியைப்பற்றி இவர் கூறும், 'நன்மை எது தீமை எது என்று, இப்போதைய ஐரோப்பிய வரையறைப்படி சீர்தூக்கினுல் மட்டுமல்ல, இந்துக்களுடையவும் மகமதியர்களுடையவுமான நெறி நூல்களில் கண்டபடியும், நாயக்கர்கள், அரசர்கள் என்ற தங்கள் கடமையிலிருந்து மிகவும் விலகி வீழ்ந்தவர்களாகவேதான் முடிவு செய்ய வேண்டும். உள்ளத்தில் ஒரு நோக்கத்தை வைத்துக்கொண்டு கோயில்களுக்கும் குருக்கள்களுக்கும் ஆரவாரமான கொடையைக் கொடுத்து, அதன் மூலமாக, பிராமணர்களுடையவும் கவிராயர்களுடையவும் போலிப் புகழ்மொழிகளைப் பெற்று, திரளான மக்களைத் தங்கள் நெறி தவறிய ஆட்சியில் பொறுமையுடன் தங்கும் வண்ணம் வைத்துக்கொண்டதேயல்லாமல், இவர்களுடைய ஆட்சி, மானமிழந்த காமக்களியாட்டமும், துரோகமும், கொள்ளையும், கொடுமையும், கொலையும், குழப்பமும்கொண்ட பட்டியலைத் தவிர வேறென்றுமில்லை' என்னும் சொற்ருெடர்களால் தெரியலாம்.

இது, சிறந்த நூலாயினும், வரலாற்று உண்மைகள் பிற்கால ஆராய்ச்சிகளால் விளங்கியுள்ளமையின், சில செய்திகளை இதில் கண்டபடியே கொள்ளுவதற்கில்லை. இந்நூல் வெங்காசாமி ராயர், நெல்ஸன் (Nelson), லோகன் (Logan), என்னும் அறிஞர் தஞ்சை, மதுரை, மலையாளம் மாவட்டங்களைப்பற்றி எழுதிய வரலாற்றுக் கைச்சுவடி வரிசையில் வைக்கத் தகுந்தது.

[வளரும்]

---

தேவதரிசனம் :

# தேவ வாழ்வு

*வரம்புக்கு உட்பட்ட வாழ்வில், வரம்பு இகந்த தத்துவங்களை வசங்குவதற்கான பேராற்றல் பெற்ற வாழ்வு தேவ வாழ்வு.*

*நேற்றே இறந்தேன் என்பது விடுதலையின் சிறகுகள். வரம்பு இகந்து வாழ வழிசெய்யும் குளிகை அது.*

ஆட்படுத்திக்கொண்டு, அதற்குத் தோற்றுவாயாகவும் வெளியீடாகவும் ஆகின்ருன். தன் மனேதத்துவத்தின் முழு அம்சங்களின் திரண்ட ஆன்மாவின் பரிபக்குவமான நிலைக்கு வந்துவிடுகின்ருன். அவனே உண்மையின் சுயரூபத்தை முழுதும் அறியவல்லவன். ஏனெனில் அவனே உண்மைப்பொருளின் சுயரூபமாகின்ருனல்லவா?

கவி காரிமாறன் அவ்வித உன்னத நிலையிலிருந்து பேசுபவர். ஆன்மாவின் சுயநிலையை அறிந்து, அதை அனுபவித்து அனுபவித்துத் தேறித்தேறி உண்மை அறிவை உலகோர்க்கு உணர்த்திய உத்தமர். தனது ஆவியுள் நிறைந்த ஞான மூர்த்தியைத் தன் தக்க ஞானக்கண்களாலேகண்டு அனுபவித்து, அனுபவித்தபடியே பேசுகிருர். அவர்கள் அவதரித்த காலந் தொட்டு உலக அனுபவங்களில் கால் தாழ்த்தாது, நள்ளிரவும் நண்பகலும் நெஞ்சுருகிப்பாடியாடிக் கண்டுகொண்ட கருத்தினை கவிபாடியவர். உலக உண்மையை உணர்ந்து உணர்ந்து அனுபவித்து ஒளி மறைவின்றி உபதேசிக்கும் உத்தமர். உலகத்தின் அமைப்பு, இருப்பு, நடப்பு எல்லாங்கண்டு அவைகளைக் குறிக்கோளுக்கு இயைவிக்க விழைகின்ருர்.

“ உயர்வற உயர்நலம் உடையவன் எவனெவன்
மயர்வற மதிநலம் அருளின னெவனவன்
அயர்வறு மமர்கள் அதிபதியவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே.”

உலக உண்மையை உணர்த்த வடமொழி வேதம் காரணப்பொருளைக்காட்டிக்கொடுத்தது. அதேபோல நம்மாழ்வாரும் உலக அடிப்படை உண்மையை உணர்த்துவான் துவங்குகிருர்.



ஒவ்வொருவரும் தந்தமக்குப் புலனுனவாறு கூறிப் போந்தனர். “அணுதான் அடிப்படைக் காரணப் பொருள் அவைகளின் சேர்க்கையாலும் பிரிவாலுமே உலக அமைப்பும் அழிவும் உண்டாகின்றன.” என்கின்றனர் ஒருசிலர். “அறிவுமயமான ‘சித்’ வஸ்து ஒன்றே காரணப்பொருள்” என்ருர் சிலர். ‘மற்றவை பொய்’, சித்தும் அசித்தும் கூடியே உலகம், “அவைகளின் சேர்க்கையிலும் பிரிவிலும் உலக அமைப்பும் அழிவும் ஏற்படுகின்றது.” என்று சாற்றுபவர் சிலர். எல்லாம் பொய் என்பாரும் உளர். இவர்களுக்கு காரணமும் காரியமும் தேவையில்லையே!

இவை எல்லாக் ‘கூற்றுக்’கும் ஒருங்கே பதிலளிப்பான்போன்று நம் கவி துவங்குகிருர்.

‘உயர்வற உயர்நலம் உடையவன்’ என்று குறை சிறிதுமின்றி மேலான குணங்களையுடையவன் எவனே அவனே உண்மையான தத்துவம். இதனல் அசித்து உலகத்துக்குக் காரணப்பொருள் அல்லவென்பது தெளிவாயிற்று. ‘சித்’ வஸ்துவிலும் தாழ்வான குணங்கள் சிறிதுமின்றி அநந்தமான கல்யாண குணங்களையுடையவனேயே காட்டுகின்றது. நிர்குணமான சித்மாத்திரவஸ்து உண்மைத் தத்துவமென்பதை விலக்குகிறது, உயர்நலமுடையவன் ‘என்பதே’. உடையவனையும் குணங்களையும் ஒன்றைவிட்டு ஒன்று ஆற்றகில்லாத தன்மையைக் குறிக்கின்றதேயன்ருே! குணமில்லையேல் பொருளில்லையிறே! பொருளில்லையேல் குணமுமில்லை. பொருளை உணர்த்த குணமும், குணத்துக்கு ஆதாரமான பொருளும் இன்றியமையாதவை. குணமில்லாத பொருள் ‘சூன்யமே!’ இதுதானே அறிவின் முதற்படி. பொருளை அறியும்போது குணங்களையிட்டேயல்லது

வேறு எவ்விதம்? விட்டுப்பிரியாத குணங்களையிட்டேயன்றோ ஒருபொருளை மற்றொரு பொருளினின்றும் அறியமுடியும். குணங்கள் பொய்யானால் பொருளும் அதன் அறிவும் பொய்யே. இதுதான் நம் கவியின் உண்மையான போதனை. இதன் முக்கியத்வத்தை உணர்த்தவே ஆரம்பத்திலேயே அதைத் தெளிவு படுத்துகிறார். 'சத்யம் ஞானம் அநந்தம்' ஆன பொருளையன்றோ வடமொழிவேதமும் உண்மையான தத்துமென்று ஓதிற்று.

எல்லையில்லாத நற்குணங்களையுடைய ஒருபரம் பொருள் உண்மையாயின் அதை அறிவான், அனுபவிப்பான், ஓர் அறிவுடையவன் அவசியமிறே! இது இல்லாமற்போனால் அது பொருளற்றது, பிரயோஜன மற்றது. அதை உணர்த்துவான் அடுத்த அடியில் ''மயர்வற மதிநலமருளினன் எவன் அவன்.'' என்று தன்னையே சுட்டிக்காட்டியருளினான். 'நான் கண்டு கொண்டேன்' என்னாது அவன் அருளினான் என்று அவன் அதீனமான தன் நிலையைத் தெளிவுபடுத்தினார். தனக்குத்தான் தோற்றுகையும் அறிவுக்கு ஆதாரமாயிருக்கையும் ஆத்ம தத்துவத்துக்குப் பொதுவான தன்மை. ஆயினும் ஜீவாத்மாவுக்குத் தனியேற்றமான அதன் ஸத்தையே முதலில் வகுக்கிறார். ஜீவாத்மா தனித்தத்துவமேயானாலும் அதன் செயல் ஆற்றுகையும், செயல்அற்று இருக்கையும் பரமாத்மாவின் அதீனமானது. இதனால் 'ஜீவாத்மா' என்ற தத்துவமில்லையென்ற வாதமும், அப்படி ஒத்துக் கொண்டால் 'தனித்தியங்கும் தன்மைத்து' என்ற ஆழ்வாருக்கு சம்மதமில்லையென்றாயிற்று. அகண்ட பரிபூரணமான ஆன்மவஸ்து தன்னைத்தானே அனேக விதமாக பிரமிக்கச்செய்கின்றது. அந்த தசையில்



அதை 'ஜீவன்' என்கின்றோம். அந்த பிரமஞானம் நீங்கினால் ஒரு தத்துவமே உண்மையென்று கூறும் மாயாவாதம் நம் கவிக்குத் திருவுள்ளமன்று. ஞான ஆநந்த அமல, அணுவஸ்துவான இந்த ஜீவாத்ம தத்துவம் அனாதியான செய்வினையின் பயனால் தன் சுயநிலை தவிர்ந்து அசித்தோடு உறவாடி அதன் வசமே அகப்பட்டு உழல்கின்றது. அதினின்றும் விடுபடவேண்டுமாயின் பரமாத்மாவின் அருளல்லது வேறு வழியில்லையென்பதை நம் கவி வற்புறுத்தியருளினார் ''மயர்வற மதிநலம் அருளினன்'' என்று.

இம்மாயாவாதியான அபேதவாதியைத்தவிர வேறு சில பேதாபேதவாதிகளுண்டே. அவர்கள் சம்சாரதசையில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் உண்மையென்றும் முக்ததசையில் அபேதமேயுண்டென்றும் சாதிப்பர். இவர்கள் 'பாதி சுரைக்காய் கரிக்கு, பாதி விதைக்கு' என்ற வகையைச் சேர்ந்தவர்கள். பரமாத்மாவில் ஒரு அம்சம் சம்சாரத்தில் இரண்டாகவும், மோக்ஷதசையில் ஒன்றாயிருக்குமென்பர். இவர்களுக்கு பதிலளிப்பதேபோல நம் கவி 'அயர்வறும் அமரர்கள் அதிபதியெவனவன்' என்றார் மூன்றும் அடியில். முத்த தசையிலும் ஜீவாத்மாவின் தனிநிலை அழிகிறதில்லை. அந்நிலையிலும் அவன் ஸ்வரூபம் பரமாத்மாவின் அதீனமானது. இதைக் குறிப்பிட 'அதிபதி' என்கிறார் கவி. மோக்ஷ தசையிலும் ஜீவன் தன்னிலை உணர்ந்து பரமாத்மாவிற்கு சமமான ஆனந்தத்தை அடைகிறான். அதனால் அனேக ஈசுவரர்களாகின்றனர் என்பதில்லை. தன்வினைப் பயனால் கட்டுண்டபோது, விடுபட்டபோது, தன் ஸ்வரூபம் ஈசுவரனதீனமானதே.

இப்படி மூன்று தத்துவங்களில் ஈசுவரனையும், சித்தையும் பேசி, அசித்தின் தன்மையை அழகாக சித்தரிக்கிறார் 'சுடரடி தொழுதெழு என்மனனே' என்று. ஈசுவரனும் ஜீவனும் ஒன்றுபட நிற்பது திவ்ய மங்கள விக்ரகமேயன்றோ? கடவுளின் ஆத்ம ஸ்வரூபம் சுபமேயாகிலும் அண்டி உய்ய வொண்ணுதே! பரன் தன்னை அண்டினார்க்குத் தன்னைக் காட்டிக்கொடுக்கும் வழி திவ்ய மங்கள விக்ரஹமே யன்றோ? பக்தர்கள்போற்றி உய்யவும் தன்னை அவர் களுக்குக் காட்டிக்கொடுக்கவும் உபாயமாக அமைந் துள்ளது விக்ரஹமே. அதுதான் சுத்த சத்வ மயமான திருமேனி! நினைத்த வடிவை ஏந்துதற்குத் தகுதியான சுத்த சத்வ திரவியத்தையிட்டு இதர இதர அசித்துக் களான பிரகிருதியையும் காலத்தையும் குறிக்கிறார்.

இம்மூன்றும் ஈசுவர இச்சையின்படியே கிடக்கு மவை. இவைகளின் சத்தையும் நடக்கையும் ஈசு வரனிட்ட வழக்கே. இவ்வாறு ஈசுவரனுக்கு இட்ட வழக்காயிருக்கச் செய்தேயும், ஜீவர்களுக்கும் அவரவர் ஊழ்வினையின் பயனாக பிரதிகூலமாயும் அற்ப அனு கூலமாயும் நடவா நிற்கும் இந்தப் பிரதிகூலத்தையே 'துயர்' என்று பேசுகிறார். மூன்று குணங்களுக்கும் ஆதாரமான பிரகிருதியோடு சம்பந்தப்பட்டதினாலே யன்றோ ஜீவனுக்குத் துன்பம் ஏற்படுகிறது. அதை விட்டால் அவனை அடையலாமே. அதற்கு உபாய மான தொழுகையும் அதற்கும் சாதனமான திருமேனி யையும் பற்றிப் பேசிப் பாசுரத்தை முடித்தருளினார்.

சிறு குழவி தாயின் கால்கட்டி முலையுண்ணுமாப் போலே இவரும் அவன் திருவடிகளைத் தொழுது துயர் களையப் பிரார்த்திக்கிறார். மனமே மனிதனை ஆக்கு வதும் அழிப்பதும், அந்த மனதைப்பற்றியே எம்பெரு



மான் திருவடிகளைத் தொழுது எழு என்று கூவியழைக் கின்றார். என் அறிவே, உணர்வே, ஆற்றலே என்னுது 'மனனே' என்று முழு மனோ சக்திகளையும் ஒன்றுபடக் கூறுகிறார். பவர்கொள் ஞானவெள்ளச்சுடர் மூர்த்தி யையும், முந்நல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவையாயும், படைப்பெடுகெடுப்புக் காக்கும் இயல் வினையும் திகழ்கின்ற பரம்பொருளேயன்றோ இவை மூன்றுக்கும் முற்றூட்டான குறிக்கோள். அதைக் கண்டவாறே தொழுகையிலும் வேறு உய்யும் வகையுண்டோ? பெருத பேற்றைப்பெற்ற உவப் பினுல் 'என்மனனே' என்கிறார். உண்பாரும் உண்பிப் பாரும் உண்டானபோது பிறர் இழந்ததைக்கண்டு 'என்' என்று பெருமிதப்படத்தடையென்? இதை யிட்டே, மதுர கவிகளும் துவங்கும்போதே 'அண்ணிக் கும் அமுதூறும் என் நாவினுக்கே' என்றார்.

மூன்று தத்துவங்களையும் ஆரம்பித்துப்பேசி முடிக்கு முன்னரே திவ்ய மங்கள விக்ரஹத்தை தொழுது எழு என்று தம் திருவுள்ளத்தை நோக்கி யருளிச் செய்கிறார். அதன் நோக்கு என்? எனின்? திவ்ய ஆத்மஸ்வரூபத்தைக்காட்டிலும் திவ்ய மங்கள விக்ரஹத்தில் தமக்குண்டான ருசியின் அதிசயத் தாலும் மேன்மையாலுமே. திவ்யாத்மஸ்வரூபம் எங்கும் பரந்துநிற்கக்கூடியது, எங்கும் மறைந்து கிடக்கும் தண்ணீர்போன்று அகழ்வாருக்கு வெளிக்காட்டும் தன்மைத்து. திவ்ய மங்கள விக்ரஹமோவெனில் தண்ணீர்ப்பந்தலில் பானைகளில் தேடிவைத்திருக்கும் குளிர்ந்த பானமோ போன்றது. கோடையில் வழி நடந்து களைத்தவன் புகுமது தண்ணீர்ப்பந்தலே யல்லவா? நாவரண்டு வழிநடந்து களைத்தவனுக்கு உபயோகப்படுவது எங்கோ நின்ற நீர் அல்ல. பானை

யில் குளிரவைத்த நீர், வழி நடந்தார் களைத்துத் தண்ணீர் தண்ணீரென நாடும்போது உதவப்பெறுவதேபோல நம் கவியும் சம்சாரத்தின் அடிச்சூட்டாலே நொந்து தவிக்கும்போது உதவப்பெறுவது திவ்ய மங்கள விக்ரஹத்தின் வடிவழகே! அதிலேயே தம் திருவுள்ளத்தை ஈடுபடுத்துகிருர். முன்செய்த தீவினையினின்றும் விடுபட்டு அந்தமில் பேரின்பத்தை அடைய திவ்ய மங்கள விக்ரக யோகமே மேன்மையானது என்று கருதி வடிவழகில் ஈடுபடுகிருர்.

தொழுகையாவது அவனை நினைந்துநைந்து குணங்களில் ஈடுபட்டு, அவனை வணங்கி வழிபடுவதேயன்றோ? நெஞ்சம் புலம்ப, செவிகளார, அவன் கீர்த்திகளையே ஏத்த, கைகளால் ஆரத்தொழுது அவனையே காணவிரும்பும் கண்களோடு கூடிநிற்றலேயாகும். இந்திரியங்கள் அவனையேபற்ற மனது அவனையே வழிபட தீவினைகளின்துன்பம் தானேதீரும் இவ்விதமான வழிபாட்டுக்கும் திவ்ய மங்கள விக்ரஹம் இன்றியமையாததே. இந்திரியங்களில் முதன்மையான கண்களையும் மனதையும் புறம்புக்காது காத்து தன்னிடத்தே ஈடுபடுத்துவது திருமேனியல்லவா?

இவர் இப்படியாகச் சிலர், கடவுளுக்கு ரூபம் உண்டோ? விக்ரஹ ஆராதனை கூடுமோ? என்று வாதிக்கின்றனர். இவர்கள் தங்கள் கொள்கையையும் வாதத்தையும் சரியாக ஆராய்ந்தார்களில்லை. தாங்கள் செய்யும் தெய்வ வழிபாட்டைக் கொஞ்சம் ஊன்றிக் கவனித்தார்களானுல் அதனிடையே வடிவவழிபாடுதான் நிலைத்து நிற்கிறதை அறிவார்கள். சரீர அவயவங்களின் வணக்கமும் வாக்கின் துதியும், கண்களின் உள்நோக்கும் மனதின் ஒற்றுமையும் தொழுகையின் போது இன்றியமையாதவை. இதை யாவரும்



ஒப்புக்கொள்வர். இவ்வளவும் கடவுளைக்குறித்துச் செய்யும் தொழுகையின் இன்றியமையாத சின்னங்களேயல்லவா? அவன் குணங்களை நா பாடும்போது, மனம் குழைந்து கண்கள் நீர்மல்கி அங்கங்கள் ஒடுங்குகின்றன. பாடும்போதும், துதிசெய்யும்போதும் அவைகளில் அடங்கியிருக்கும் கருத்துக்கள் மனதை வசப்படுத்துகின்றன. ஆண்டவனின் குணங்களும் செய்கைகளும் செவியில் புகுந்து மனதை ஆட்கொள்ளுகின்றன. அப்போது தொழுகிறோம். இதர ஒலிகள் உண்டாகும்போதும் இவ்விதமான விகாரம் உண்டாவதில்லை. குறிப்பிட்ட ஒலிகளே குறிப்பிட்ட எண்ணத்தையும் தோற்றத்தையும் உண்டாக்கும். தொழும்போது உண்டாகும் தோத்திர ஒலிகள் நம் மனக்கண்முன் தோத்திரங்களில் அடங்கிய குணங்களோடு கூடிய வடிவங்களை எழுப்புகின்றன. ஒலி வடிவங்கள் வரிவடிவமாய் திகழ்கின்றபோதும் நாம் வணங்குகின்றோம். ஆனுல் உருவ வடிவங்கள் ஆகாதென்கின்றோம். வரிவடிவம் உருவ வடிவமல்லவா? வரிவடிவம் கூடுமானுல் உருவவடிவமும் கூடுமே! அதனுல் சிலை வடிவமும் உருவவடிமேயன்றோ? கடவுளை வடிவங்கள் உள்ளபடி காட்டாது என்று கூறுவோமானுல் ஒலியும் அவ்விதமே; வரிவடிவமும் அவ்வாறே! சிலை மனிதனுல் ஆக்கப்பட்டதென்ருல், ஒலியும், மனிதனுல் எழுப்பப்பட்டதே; வரிவடிவும் எழுதப்பட்டதே. சொல்லினுல் கடவுள் காட்டப்படுகிருன் என்ருல் சித்திரத்தாலும் சிலையாலும் ஏன் கூடாது? சொல்லின் உருவமான எழுத்தும் சித்திரமேயன்றோ? ‘ஒலிவடிவமும் வரிவடிவமும் கூடும் ஆனுல் சிலை வடிவம் கூடாது’ என்ருல் அது வாதமல்ல. பிடிவாதம். இதற்குப் பரிஹாரமும் இல்லை. பதிலும் இல்லை.



# நெஞ்சு பொறுக்குதில்லையே ...

— கோவை. அ. அய்யாமுத்து

## மக்களின் ஒழுக்கம் கெட காரணம்...

சென்றமாதம் எனதருமை நண்பர் ஈ. வெ. ரா. பெரியார் அவர்களை திருச்சி வானொலி மாறன் பேட்டிகண்டபோது

மக்களின் ஒழுக்கம் கெட்டு வருகிறதே அதைக்காப்பதற்கு வழியென்னவென்று கேட்டார்.

ஆம், கெட்டுத்தான் வருகிறது. இன்னும் அதிகமாகக் கெட்டுப்போகும். இப்போதாவது கொஞ்சம் பாதுகாப்போடு வாழ்கிறோம். போகப்போக அதுவும் போய்விடும் என்றார் பெரியார்.

மத நம்பிக்கையும், கடவுள் பக்தியும் இல்லாததால் மக்களின் ஒழுக்கம் நாளுக்கு நாள் குறைந்து வருவதாகத் தன் மனதில் எண்ணிக்கொண்டு வானொலி மாறன் அக் கேள்வியைக் கேட்டார்.

ஆனல் ஒழுக்கமின்மைக்கு மூல காரணம் ஜனநாயகம் என்று பெரியார் ஒரு போடு போட்டார்.

செல்வன், வறிஞன், கற்றவன், கல்லாதவன், நல்லவன், பொல்லாதவன் என்ற பேதமின்றி, வயது வந்த எல்லோருக்கும் வாக்குரிமை அளித்துள்ள ஜனநாயகம் பெரியாருக்குப் பிடிக்காது.

ஆம். அந்த பேதம் கூடாது, இந்த வித்தியாசம் கூடாது. பறையனும் பார்ப்பனனும் சமமானவர்கள் என்று பெரியார் எவ்வளவு உயரமான கோபுரத்தின் மீதிருந்து பேசினலும், எழுதினலும் அவருடைய மனதின் ஆழத்திலே யோக்யதை அல்லது தகுதி என்ற எண்ணம் குடிகொண்டிருக்கிறது.

நாத்திகம், பொதுஉடமை, சமத்துவம், சமய ஒழிப்பு, சாதி ஒழிப்பு, மூட எண்ணங்களும், பழக்க வழக்கங்களும் ஒழிப்பு என்று எவ்வளவு பெரிய வெடி குண்டுகளைப் பெரியார் வீசி எறிந்து கொண்டிருந்தாலும், அவருடைய மனதின் அடித்தளத்திலே, அவனுக்கு என்ன யோக்யதை இருக்கிறது என்று விசாரிக்கும் குணம் கொஞ்சமும் மாருமல் கடந்த அரை நூற்ருண்டு காலமாக அப்படியே படிந்து கிடக்கிறது.

பெரியாருடைய பாஷையில் சொல்வதென்ருல், ஒவ்வொரு மனிதனுடைய தகுதியையும் சீர்தூக்கி எடை போட்டுப் பார்ப்பது அவரிடம் ஒரு 'ஹாபிட்'டாய் அமைந்துவிட்டது.

இந்த மனப்பழக்கத்துக்கும் அவரது பேச்சுக்கும் இடையே பலமான மோதல் ஏற்பட்டு வருவதை அவர் வெகு நன்ருக அறிவார்.

## தமிழ் நாட்டில் யார் பெரிய மனிதன்?

தமிழ்நாட்டில் எவன் பெரிய மனுஷன் இருக்கிருன். எந்த நல்ல காரியத்தை நாம் எவனைக் கூப்பிட்டு நடத்திக்கொடுங்கள் என்று கேட்பது? நீங்கள்தான் சொல்லுங்கள் பார்ப்போம் என்ற கேள்வியை போட்டு அவர் வானொலி மாறனைத்

திணரடித்தது இந்த அடித்தள எண்ணத்தின் விளைவினுல் ஏற்பட்டதாகும்.

பெரியாரின் நாத்திகப் பிரசாரத்தால் எவரும் கெட்டுப் போகவில்லை. ஒரு கைப்பிடி அளவு உப்பை ஒரு பெரிய ஏரியில் கரைத்தால் அதில் எவ்வளவு மாறுதல் உண்டாகுமோ அவ்வளவு கூடப் பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கை மக்களின் மனதில் ஏற்படுத்திவிடவில்லை.



கடவுள் பெயரை விரும்புவதும் விரும்பாது வெறுப்புடன் பேசுவதும் மக்களிடையே ஒரு பழக்கமாகப்போய்விட்டது. கடவுளிடம் நம்பிக்கைபூண்டிருப்பவர்கள் எல்லோரும் யோக்யர்கள் என்று சொல்ல முடியாது. பெரியாருடைய பாஷையில் சொல்வதானுல் கடவுளிடம் நம்பிக்கை கொள்வதற்கும் ஒரு தகுதி இருக்க வேண்டும்.

இந்தவாதம் கடவுளிடம் நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் பொருத்தமுடையதாகும்.

அறநெறிகளைக் கடைப்பிடிப்பதற்கு ஆண்டவனிடத்தில் நம்பிக்கை இருந்தே ஆகவேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

கடவுளிடத்தில் நம்பிக்கை கொண்டுள்ளவர்களைவிட கடவுளிடத்தில் நம்பிக்கைகொள்ளாதவர்கள் அறநெறி தவருது உலகெங்கும் ஒழுகுவதை கண்டிருக்கிறேம் என்று சார்லஸ் பிராட்லா என்ற பேரறிஞர் இதைப்பற்றி மிகத் தெளிவாக கடந்த நூற்ருண்டில் வெகு விளக்கமாகக் கூறியிருக்கிருர்.

பற்பல மதங்களிடையே அடிக்கடி ஏற்படும் பூசல்களின் உத்வேகத்தைத் தணித்து, மக்களின் மனதில் சமரச சன்மார்க்க உணர்ச்சியைப் புகுத்துவதற்கு இத்தகைய நாத்திகப் பிரசாரம் பெரிதும் துணைபுரிகிறது என்பதே எனது தாழ்மையான கருத்து.

## குடியரசில் நாத்திகத்தின் முதல் கட்டுரை

இக்கருத்தை ஆதாரமாகக்கொண்டு இன்றைக்கு சரியாய் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் பெரியார் துவக்கிய 'குடியரசு' எனும் பத்திரிகையில் நான் 'நாத்திகம்' என்ற தலைப்பிட்டு ஒரு நீண்ட கட்டுரை எழுதினேன். பெரியாரின் பத்திரிகையிலேயே முதலாவதாகப் பிரசுரிக்கப்பட்ட நாத்திகக் கட்டுரை என்னுடையதுதான்.

அப்போது நடைபெற்றிருந்த சுயமரியாதை இயக்கத்துக்கு ஆதரவு காட்டியவர்களில் நூற்றுக்கு தொண்ணூற்றைந்து பேர் ஆஸ்திகர்கள் ஆவார்கள். அவர்களில் பலர் எனது கட்டுரையை கண்டு முணுமுணுத்தார்கள். பெரியாருக்கு ஆட்சேபணைக் கடிதங்கள் எழுதினுர்கள். பெரியார் சிந்திக்கத் தொடங்கினுர்.

எத்தனை பிராட்லாக்கள் தோன்றினுலும் சரி, எத்தனை பெரியவர்கள் பிறந்தாலும் சரி மனிதர்களுடைய மனதிலிருந்து கடவுள் எண்ணத்தைப் பறிப்பதென்பது இந்த உலகில் இயலாத காரியம். எனவே அதைக்கண்டு – நாத்திகப் பிரசாரத்தைக் கண்டு - எவரும் பயப்படத் தேவையில்லை.

எல்லா மனிதர்களும் தெரிந்த ஞானிகளாய், மனபக்குவம் உள்ளவர்களாய், நன்மை தீமையும், தர்மாதர்மமும் உணர்ந்த சீலர்களாய் இருந்திடும் பட்சத்தில் கடவுளைப்பற்றி யாரும் கவலைப்பட வேண்டியதில்லை.

ஆனுல் பலதிறப்பட்ட மனே நிலையுடைய மக்கள் சமுதாயம் சீராக வாழ வேண்டுமெனில் எல்லா உயிரும் பராபரன் இயங்கும் சந்நதி காண் - என்ற பொதுமை உணர்ச்சி இவ்வுலகில் பிறக்கும் ஒவ்

வொரு மனித உள்ளத்திலும் புகுந்து பண்புறச் செய்யவேண்டும். இந்த ஆன்மீக ஒருமைப்பாட்டுக்கு உறுதியளிப்பது கடவுள் எண்ணம் ஒன்றேயாகும். இந்த எண்ணத்தை அஸ்திவாரமாகக்கொண்டு தான் பிறநல்லெண்ணங்கள் என்ற மாளிகை மனித உள்ளங்களில் எழுப்ப முடியும்.

## காந்தியை வாழ்த்தியவர் பெரியாரை வாழ்த்தலாமா...

நாத்திகன் என்பவன் எதையோ சொல்லிக்கொண்டிருக்கட்டும். அவன் மனதில் கடவுள் நம்பிக்கை இல்லாதிருக்கட்டும். அதனால் மனித சமுதாயத்துக்கு யாதொரு தீங்கும் ஏற்படப்போவதில்லை.

ஆனால் நாத்திகன் என்பவன் உடலிலும் ஆண்டவன் குடிகொண்டிருக்கிறான் என்ற எண்ணம் ஆத்திகனுடைய மனதில் இடம் பெறத் தவறுமேயானால், அதனால் விளையும் அனர்த்தங்கள் பலவாகும்.

கல்லிலும், மண்ணிலும், செம்பிலும், பித்தளையிலும் கடவுளையும் ஒரு சலனத்தையும் காணவல்ல ஆத்திகன், தன்னைப் போன்ற பிற மனிதனுடைய சரீரத்தில் பராபரனைக்காண மறுப்பானேயாகில் அவன் மனிதனாகமாட்டான். அவன் கொடிய விலங்காவான். அவன் தன்னை ஒரு கடவுள் பக்தன் என்று சொல்லிக் கொள்வது மௌடீகம். அத்தகையவனால் தான் நாத்திக எண்ணம் உலகில் வளர்ச்சியடையும். உண்மையான நாத்திகனால் அல்ல.

அனைத்துயிர் ஒன்றென்று எண்ணுபவன்தான் மெய்யான கடவுளின் பக்தன். அவனே மெய்ஞ்ஞான முற்றவனாவான்.

ஒருவனுடைய வாயினுள் நுழையும் பொருளால் அவன் சாதகபாதகமடைவான். மிக நெருங்கிய உறவினர்களான மனைவி மக்களை வேண்டுமானால் அது பாதிக்குமேயன்றி அடுத்த வீட்டுக்காரனை அது பாதிக்கமாட்டாது.

ஆனால் ஒருவன் வாயினின்று வெளியில் வருவது எல்லோரையும் பாதிக்கும் தன்மையுடையது.

பாலைக் குடித்துவிட்டு ஒருவன் தூஷணையாகப் பேசினால் அவன் பாலைக் குடித்த காரணத்தால் யாரும் பொறுத்துக் கொள்ளமாட்டார்கள்.

அதேபோன்று மதுவை அருந்திவிட்டு ஒருவன் மதுரமான கீதங்கள் பாடினால், அவன் மதுவருந்திய காரணத்தால் மற்றவர்கள் தங்கள் காதுகளில் பஞ்சை வைத்து அடைத்துக்கொள்ளமாட்டார்கள்.

## சகிப்புத்தன்மை வேண்டும்

உலகில் உள்ள நானூறுகோடி மக்களும் தன்னிச்சையாக, சுயமாக சிந்திக்கும் ஆற்றலைப் பெற்றிருக்கிறார்கள். அனுபவத்தாலும், கல்வி, கேள்விகளாலும் அச்சிந்தனை வலுப் பெறுகிறது. எல்லா விஷயங்களிலும்



ஒன்றுபோலவே ஒருமித்த கருத்துடையவர்களைக் காண்பது அரிது. எனவே ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கருத்துப்படி எண்ணவும், பேசவும் சுதந்திரமுடையவனாகிறான். ஆனால் காந்தி நூற்றாண்டுவிழா கொண்டாடப்படும் இந்த நேரத்திலே தில்லிமாநகரிலிருந்து தெற்கே கன்யாகுமரி வரை சகிப்புத்தன்மை குதிரைக் கொம்பாகிவிட்டது.

ராஷ்டிரபதி தேர்தலுக்கு யாரை நிறுத்துவதென்பதில் அகில இந்திய காங்கிரசின் காரியக் கமிட்டியில் பிளவு ஏற்பட்டது. பின்னர் சஞ்சீவ ரெட்டியின் அபேட்சா பத்திரம் தாக்கல் செய்யப்பட்டது. அத்துடன் பிளவு தீர்ந்ததென மக்கள் எண்ணினார்கள்.

ஆனுல் இந்திராகாந்தி அம்மையார் தமது அபேட்சகருக்கு எதிராக தாமே வேலே செய்து அவரைத் தேற்கடித்தார்.

பிளவு முற்றிக்கொண்டது. காந்தீய நெறிக்கு முற்றிலும் முரணுக ஒருவரை யொருவர், சிறு பிள்ளேகளும்கேட்டு சிரிக்கத்தக்க வகையில் செல்லலாயினர்.

சகிப்புத்தன்மை காற்றில் பறந்தது.

தெற்கே காமராஜர் பதவியில் இருந்த காலத்தில் அவரைத் தெய்வமாகப்போற்றி வழிபட்டு வந்தனுபசாரம் செய்தவர் களெல்லாம் அவரை மிகக் கேவலமான முறையில் தாக்க ஆரம்பித்துவிட்டனர்.

அவரது பிறந்தநாள் விழாக்களே ஒவ்வொரு ஆண்டும் நாற்பது லட்சம் ஐம்பது லட்சம் செலவில் நாடெங்கும் கொண்டாடினுர்கள்.

கடவுளாகக் காட்சியளித்திருந்த காமராஜர் இப்போது அவர்கள் கண்களில் கரடியாகக் காணப்படுகிருர்.

காமராஜர் எப்படியோ போகட்டும். அவர் சேகேறிய கட்டை. அவரால் உதை வாங்கவும் வலுவுண்டு. திருப்பி ஒன்றுக்கு நான்காகக் கொடுப்பதற்கும் வலிவுண்டு.

## தாரகேஸ்வரி அம்மையார்

ஆனுல் மிக மென்மையான தாரகேஸ்வரி மிக மட்டமான முறையில் தாக்கப் படுவது மனதுக்கு மிக்க வேதனே தருவ தாகவும் தலேகுனியச் செய்வதாகவும் இருக்கிறது.

முதலாவதாக மாஜி தமிழக முதல்வர் பக்தவத்சலம் தாரகேஸ்வரி ஒரு சினிமா ஸ்டாரென்று கருதி கூட்டிவைத்தார். அவர் வீட்டிலும் பெண்டு பிள்ளேகளே வைத்துக்கொண்டு அவர் அப்படி வழி காட்டியது துரதிர்ஷ்டமானது.

தாரகேஸ்வரி அம்மையாருக்கு 43 ஆண்டுகள் முடிந்துவிட்டது. அவர் மணமாகி நான்கு பிள்ளேகளுக்குத் தாயாக இருக்கிருர். மூத்த குழந்தை ராகாவிற்கு பதினுன்கு வயதாகிறது. சுதந்திரப் போர்க்களத்தில் தாரகேஸ்வரி குதித்து இருபத்தேழாண்டுகள் ஆகின்றன. பாட்ஞு பெண்கள் கல்லூரியில் அவர் மாணவியாக இருக்கையிலேயே அவர் சமூக சேவை மேற்கொண்டார்.



பீகார் மாநில மாணவர் காங்கிரசின் தலேவராக அவர் பணியாற்றுகையில் இரண்டரை லட்சம் ரூபாய் வசூலித்து ஒரு மாணவர் விடுதியைக் கட்டினுர்.

அவருடைய தந்தையார் டாக்டர் சியோநந்தன் பிரசாத் தனது மகளே சமூக சேவையில் ஊக்குவித்தார்.

1942 ஆகஸ்ட் போராட்டத்தில் தாரகேஸ்வரி ஒன்பது மாதங்கள் சிறை வாசம் செய்தார்.

1949ல் அவர் லண்டன் சென்று பொருளாதாரக் கல்லூரியில் படித்து தேறினுர்.

அங்கிருந்து திரும்பியதும் 1952ல் தில்லி பாராளு மன்றத்தின் அங்கத்தினரானுர்.

பிரதமர் நேருவின் மந்திரிசபையில் ஒரு அங்கத்தினராகச் சிறப்புடன் பணியாற்றினுர்.

காங்கிரஸ் இரண்டாகப் பிளவுண்டதைப்பற்றி தாரகேஸ்வரி வருந்தவில்லே. அதற்கு மாருக அவர் சந்தோஷப்படுகிருர்.

காங்கிரஸ் பிளவுறுதிருந்தால் அது நைந்து நைந்து அழுகிப்போயிருக்கும் எனக் கருதுகிறார்.

காங்கிரஸ் பிளவுண்டதால் அது காய கற்ப சிகிச்சை பெற்று வருவதாகக் கருது கிறார்.

காங்கிரஸ் பிளவுற்றதன் விளைவாக இதர அரசியல் கட்சிகள் எல்லாம் நான், நீ என்று முன்னேற்றப்பாதையில் காலடி எடுத்து வைப்பதாகவும் கருதுகிறார்.

எதிர்காலத்தில் ஒரு சிறப்பான சோஷலிசக்கட்சி உருவாகுமென நம்புகிறார்.

அந்த அம்மையார் செய்த 'பாப காரியங்கள் இரண்டு. ஒன்று அவர் பெண்ணாகப் பிறந்தது. மற்றொன்று அவர் உள்ளொன்று வைத்து புறம்மொன்று பேசத் தெரியாதிருப்பது.

மற்றொன்றும் சேர்த்துச் சொல்லலாம், அது ஊர்வசியைப்போன்று அம்மையார் உருக்கொண்டது.

ஆனால் அம்மையார் சாவித்திரி - கண்ணகியொத்த பத்தினிப்பெண்ணாவார்.

பக்தவத்சலத்திற்கு அமைந்துள்ள கொரிலா முகம் அந்த அம்மையாருக்கு இல்லை.

பக்தவத்சலம் எண்ணுகிறபடி இருந்தால் அந்த அம்மையார் தினேஷ்சிங், கரன்சிங் போன்ற இளந்துருக்கிகளின் முகாமில் அல்லவா இருந்திருப்பார்.

நிஜலிங்கப்பா, காமராஜர் போன்ற கிழங்களுடன் அவர் சேர்ந்திருக்கமாட்டா ரல்லவா?

## கவிஞர் கண்ணதாசன்

இவர் காமராஜருடன் இருக்கையில் சுப்ரமணியதாஸர்கள் இவரைப் பலதுங் கூறிப் பழித்து வந்தார்கள். இப்போது காமராஜரை விட்டு விலகி வந்தபின் அவரைத் தூற்றியவர்கள் எல்லாம் போற்றுகிறார்கள். கண்ணதாசனுக்கு இது நல்ல காலமா அல்லது கெட்ட காலமா என்று எனக்குச் சொல்ல தெரியவில்லை.

## எனது பிரார்த்தனை !

மாண்புமிக்க தோழர்களே! நான் எந்தக் கட்சியிலும் இல்லை. மனிதனை மனிதனாக மதிக்கும் கட்சிதான் என்னுடையது.

பிரிந்தவர் கூடலாம். கூடியவர் பிரியலாம். ஆனால் நெஞ்சகத்தில் உள்ள அன்பும், பண்பும், நேசமும், மரியாதையும் என்றும் பசுமையாக இருக்க வேண்டும்.

காந்தி நூற்றாண்டுவிழா கொண்டாடும் இந்த நேரத்தில்: பகைவனுக்கருள்வாய் - என்று பரனை நோக்கி துதிப்போமாக. நேரிய பாதையில் சீரிய முறையில் அடியெடுத்து வைப்போமாக. வந்தே மாதரம்! *

---


**Statement about ownership and other Particulars of the Shivaji**

Form IV

(**See Rule No 8**)

1. Place of Publication : Tiruchrapalli-2.
2. Periodicity of its publication : Monthly
3. 4&5, Name of the Printer, Publisher and Editor : Triloka Sitaram,
Nationality : Indian.
Address : 2-A, Fort Station Road, : Tiruchirapalli-2.
6. Name and address of the individual who own the newspaper } Triloka Sitaram, 2-A, Fort Station Road, Tiruchirapalli-2.

I, Triloka Sitaram heraby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Tiruchirapalli-2, March 15, 1970.

(Sd) **Triloka Sitaram**
Publisher.

# சரோஜினி தேவியார்

— வி. ஜி. சீனிவாசன்

சரோஜினி தேவியார் பெரும் புகழ் கொண்ட அம்மையார். ஆற்றலும் ஆர்வமும் மிகுந்து விளங்கியவர்; பல வேறு திறமைகள்கொண்ட அம்மையார். அவர்கள் கவிஞரென வாழ்க்கையைத் தொடங்கியவர்கள். பின்னர் நிகழ்ச்சிகளின் நிர்ப்பந்தம் தேசியப் போராட்டத்திலே அவர்களை இழுத்துவிட்டது. அப்போது முழு ஆர்வத்துடனும், உணர்ச்சியுடனும் அதிலே ஈடுபட்டுவிட்டார்கள். பின்னர் எழுதுகோல் எடுத்துத் தாளிலே அவர்கள் மிகுதியாகக் கவிதைகள் எழுதிவிடவில்லை. ஆனல் அவர்களது வாழ்க்கை முழுவதுமே கவிதையாகவும் இசைப்பாடலாகவும் ஆகிவிட்டது. தேசியப் போராட்டத்திலே தேச பிதா காந்தியவர்கள் அறம் சார்ந்த சிறப்பைப் புகுத்தியது போலவே அம்மையார் கலைவனப்பையும் கவிதையையும் புகுத்திப் பெருமை படுத்தினர்கள்.

வாழ்க்கையிலேயே சுவையும், போரபத்துக்களையும் கோர சம்பவங்களையும் சமாளிக்க வல்ல எதற்கும் இணங்கா ஆர்வத்தையும் நமக்கெல்லாம் வழங்கினர்கள். ‘இடுக்கண் வருங்கால் நகுக’ என்பதே அவர்கள் கொள்கை. ‘‘அம்மையாரது வாழ்க்கையானது ஜீவசக்தி முழுமையாக நிரம்பியது. அவர்கள் எதைத்தொட்டார்களோ அதற்கெல்லாம் தனது உணர்ச்சியை ஊட்டினர்கள். அவர்கள் மெய்யாக அனற் பிழம்பாக விளங்கினர்கள்,’’ என்று பாரதமணி ஜவாஹர்லால் நேரு அவர்கள் கவியரசி மறைந்த மறுநாளான 3-3-1949 அன்று கூடிய அரசியல் நிர்ணயசபையிலே குறிப்பிட்டார்கள்.

சரோஜினியார் வங்க நாட்டிலே பிரும்மநகரம் என்னும் ஊரிலே, அகோரநாத சட்டோபாத்யாய என்னும் பெரியவர்க்கும் வரதசுந்தரி என்னும் அம்மையார்க்கும் முதற்குழந்தையாக 13-2-1879 அன்று பிறந்தார். சிறு வயதிலேயே பாடல்கள் இயற்றத் தொடங்கினர்.

தமது பதினேராவது வயதில், பீஜகணிதம் செய்துபார்க்க முயன்றபோது கவிதை இயற்ற வந்துவிட்டதை உணர்ந்தார். பன்னிரண்டாவது வயதிலேயே சென்னைப்பல்கலைக்கழகத்தின் ‘மெட்ரிகுலேஷன்’ தேர்விலே தேர்ச்சிபெற்று, மாகாணத்திலேயே முதலாவதாகவும் திகழ்ந்தார். பதின்மூன்ருவது வயதிலே ஆயிரத்து முந்நூறு வரிகள்கொண்ட காவியம் ஒன்று இயற்றிவிட்டாராம். தமது பதினருவது வயதிற்குள்ளாக ஏராளமான நல்ல நூல்களைப் படித்து முடித்துவிட்டார். நவீனமொன்றும் எழுதியதுண்டு.

தகப்பனர் குடியேறி நிலைத்துவிட்ட ஹைதராபாதிலே வாழ்ந்து வந்த சரோஜினியார்க்கு சமஸ்தான உபகாரச் சம்பளம் கிடைத்தது. அதன் பயனக அவர் 1895இல் இங்கிலாந்து சென்ருர். லண்டனில் உள்ள அரசர் கல்லூரியிலும், கேம்பிரிட்ஜிலுள்ள கர்ட்டன் கல்லூரியிலும் கல்வி பயின்ருர்கள். 1898இல் ஹைதராபாது திரும்பிவிட்டார்கள்.

தமது பத்தொன்பதாவது வயதிலே ஹைதராபாத் நிஜாமின் பிரதான மருத்துவ அலுவலரான டாக்டர் எம். கோவிந்தராஜலு நாயுடு அவர்களை மணந்துகொண்

டார்கள். இந்த மணமானது பல வகையிலே புதுமையானதாகவும் புரட்சிகரமானதாகவுமிருந்தது. ஜாதி, மாகாண, மொழி ஆகிய வேற்றுமைகளைக் கடந்ததாக இருந்தது. இல்லற வாழ்க்கையானது சீரும் சிறப்பும் மகிழ்ச்சியுமுடையதாக விளங்கியது என்பதில் ஐயமில்லை.

சரோஜினி தேவியாரது கவிதைத் தொகுப்புப் புத்தகங்கள் 'பொன்வாயில்,' 'காலப் புள்' 'ஒடிந்தசிறகு' ஆகியன முறையே 1905, 1912, 1915 ஆண்டுகளில் வெளிவந்தன. (தேவியாரது கவிதைகள் அனைத்தும் ஒரு சேர அடங்கிய நூலொன்று 1943இல் The Sceptred Flute என்னும் பெயரிலே வெளியானது)

வெள்ளப் பெருக்கால் பாதிக்கப்பட்டு அல்லலுற்ற மக்களுக்குத் தக்க உதவிகளைச் சரியான சமயத்திலே செய்வதற்கு மிகுந்த ஆர்வத்துடன் ஈடுபட்டதாலே கவியரசின் பணிகளை மெச்சிய பிரிட்டிஷ் அரசாங்கமானது ஏழாம் எட்வர்டு காலத்தில் 1908இல் 'கெய்சர்-இ-ஹிந்த்' எனும் பதக்கத்தை வழங்கி, அம்மையாரைக் கவுரவித்தது. இவரது கவிதைகளை பாராட்டிய ஆங்கில நாட்டோர் 1914 இல் தமது ராயல் இலக்கியக் கழகத்திலே Royal Society of Literature இவரையும் ஒரு அங்கத்தினராகச் சேர்த்துக்கொண்டனர். ஃது சிறந்ததொரு கவுரவமேயாகும்.

8-8-1914இல் காந்திஜியை சரோஜினி தேவியார் லண்டன் மாநகரில் கீழ்ப் பகுதியிலுள்ள கென்சிங்டன் என்னும் இடத்தில் இருக்கும் ஓர் இல்லத்தின் மாடியிலே முதன் முதலாகச் சந்தித்தார்கள். காந்திஜியின் எளிய தோற்றம், சிறந்த நோக்கங்கொண்டு வாழும் தொண்டு உள்ளம், அஹிம்சை-உண்மை அடிப்படையில் நிலைத்த வாழ்வு ஆகியனவெல்லாம் தேவியாரைக் கவர்ந்தன. காந்திஜி இந்தியா திரும்பிய பின்னர் அவரது சிஷ்யை போலவே ஆகிவிட்டார் தேவியார். 1916ஆம் ஆண்டிலே லக்னோ நகரில் அகில இந்திய தேசிய காங்கிரசு கூடியது. அதிலே தீர்மானம் ஒன்று கொணர்ந்தார்கள் தேவியார். அப்போதிருந்தே தேவியாரின் அரசியல் பிரவேசம் உறுதிப்பட்டு நிலைபெறத் தொடங்கியது என்னலாம். 1918இல் காஞ்சிபுரத்திலே கூடிய தமிழ்நாட்டு (மாகாண) அரசியல் மாநாட்டிலே தலைமைவகித்தார். பஞ்சாப் மாகாணத்திலே, அமிர்தசரஸ் ஊரிலே நடைபெற்ற ஜலியன்வாலாபாக் படுகொலையைப்பற்றிப் பெரிதும் உளம் நொந்தவராகி 1920இல் தாம் பெற்றிருந்த 'கெய்சர்-இ-ஹிந்த்' பதக்கத்தை அரசாங்கத்திடம் திரும்பத் தந்துவிட்டார். 1924 இல் தென் ஆப்பிரிக்கா சென்று பல சொற்பொழிவுகள் வாயிலாக அங்கு இருந்த இந்திய மக்களுக்கு ஊக்கம் அளித்தார். 1925இல் கான்பூரில் நடைபெற்ற அகில இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டிற்குத் தலைமைவகித்தார். மூன்றாண்டுகள் கழித்து ஆங்கில நாட்டிற்கும் அமெரிக்காவிற்கும் பயணம் சென்று நமது நாட்டு மக்களில் சுயராஜ்யக் கிளர்ச்சி பற்றிய தெளிவான, விளக்கமான சொற்பொழிவுகள் செய்தார். 1930இல் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டார். அடுத்த ஆண்டு காந்திஜியுடன் லண்டனில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டிற்குச் சென்று திரும்பினர். 1942இல் தனியாள் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றுர்.

1947இல் இந்தியா விடுதலை பெற்றதும் ஐக்கிய மாகாணங்களின் கவர்னராக நியமனம் பெற்று 'உயர்ந்த பதவி பெற்ற சிறந்த ஊழியராகத்' திகழ்ந்தார். அப்பதவியிலிருந்தபோதே 2-3-1949 அன்று புகழுடம்பு எய்தினர்.

'பாரத கோகிலம்' என்று உலகப் புகழ் பூத்த அம்மையாரின் அரசியல் வாழ்வு காந்தியடிகளோடு இணைந்த வாழ்வு. கவியரசியின் நினைவினைப் போற்றுவோமாக!

*

# மனிதர்கள் வேண்டும் !

— சாலை இளந்திரையன்

உங்களைத்தான் மனிதர்களே, பாடிப் பாடி
உயிர்ப்பிக்க நினைக்கின்றேன்: நீங்க ளென்றால்,
சிங்கியடிக் கின்றீர்கள் யார்பின் னாலோ-
சிரம்தாழ்த்து கின்றீர்கள் எதன்முன் னாலோ!

முதுகெலும்பை வலுவாக்கி, உங்களைப் போல்
முயற்சியுள்ள மற்றோரைத் துணைவ ராக்கி,
"எதுகொடுமை?" என்றதட்டி நீங்கள் வந்தால்
எங்குநிற்கும் அக்கொடுமை, மனிதன் மாரோ?

எண்சாணில் மேலுள்ள இதயச் சாணை
ஏனென்று கேளாமல் இருளப் போட்டு,
மண்சாணை, — வயிறென்னும் வறட்டுச் சாணை,—
மதித்தவர்கள் எங்கேனும் வளர்ந்த துண்டோ?

தலைநிமிர்ந்து பார்க்குமந்த நினைவு மின்றிச்
சாண்வயிறே குறியாக இருக்கும் பூச்சி
மலையருகில் பிறந்தாலும் மண்ணில் சாகும்;—
வயிரமனம் இல்லாதார் வாழ்வ தில்லை!

ஒருநாளில் வாடிவிடும் பூவைக் கூட
உள்ளத்தில் வைக்கின்றோம், சிரிப்ப தாலே!
திருநாளை நமக்குநாம் ஆக்கா விட்டால்,
செத்தவுடன் செத்ததுநம் நினைவுக் கீற்று!

ஒன்றாக நின்றுழைக்க நினைத்தீ ரில்லை—
ஒருவர்போல் உண்டுடுக்க விழைந்தீரில்லை;
குன்றாத வரலாற்றுக் காவி யத்தில்
குறைசெருக வந்தீர்கள், அய்ய மில்லை!

கலகலப்பால், பொய்ச்சிரிப்பால் வரைந்த ஏடும்
கண்ணீரால் செந்நீரால் வரைந்த ஏடும்
கலந்துகிடக் கின்றன,இவ் உலக மென்னும்
காவியத்தில்! — இக்கொடுமை மாற வேண்டும்!

வாழ்க்கைஎன்னும் காவியத்தைக் கற்போ ரென்போர்
பதவுரையும் பொழிப்புரையும் கற்கின் றார்கள்;—
வாழ்க்கையினைத் திறனாய்வு செய்தல் வேண்டும்,—
மதிப்பிட்டுப் புதுக்கிட்டுப் பேணல் வேண்டும்!

துச்சனரைக் கண்டுதொலை விலகிப் போகச்
சொன்னவர்க ளேநம்மைத் தொலைத்த பேர்கள்!—
துச்சனனை அச்சமயம் தொலைத்துத் தீர்த்தால்,
தொடைநடுங்கக் கோழைகளே இரார்க ளன்றோ?

புதுமனித ராய்ப்பிறந்து வெளிவா ருங்கள்;
புவிவாழ்வில் உயர்வாழ்வின் ஒளிசே ருங்கள்:
எதுகருதி இதுசொன்னேன், புவியீர்? என்றன்
இருதோளால் அணைத்துவக்க மனிதர் வேண்டும்!

# எனது பழைய நினைவுகள் (3)

— கோவை. அ. அய்யாமுத்து

ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட்டு ஒன்றுகும்
அன்றி, அது வரினும் வந்தெய்தும் — ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல் [ஔவையார்]

1922ம் ஆண்டின் துவக்கத்திலே, கல்கத்தாவில் சௌரங்கி என்ற பாகத்திலே, காலை சுமார் பத்துமணிநேரத்திலே, மிகப் பிரபல்யமான ஒரு ஆங்கிலேயர் ஓட்டலின் உள்ளே அமர்ந்து தேநீர் பருகிக்கொண்டிருந்தேன்.

காலை பத்துமணி என்பது ஒரு அசாதாரண நேரம். அந்நேரத்தில் வெகுவாய் ஓட்டல்களிலே சாப்பிடுவதற்கு யாரும் நுழையமாட்டார்கள்.

வெள்ளை வெளேரென்று ஒரு உருவம் உள்ளே நுழைந்தது. ஆம் அவரும் வெள்ளை, அவர் அணிந்திருந்த ஆடையும் துய்யவெள்ளை. அவர் முகத்திலும் வெள்ளைத்தாடி சுமார் ஒரு அங்குலம் நீளம் ஒழுங்காகக் கத்தரித்துவிடப்பட்டிருந்தது.

வந்தவர் எனது மேஜையருகில் உட்கார்ந்தபடியே 'குட்மார்னிங்' என்ருர்.

''வெரிகுட்மார்னிங் சார்'' என்று நான் சொல்ல, அவர் என்னைப்பார்த்து தி சன் இஸ் வெரி பிரைட் திஸ் மார்னிங் என்று என்னிடம் சுமுகமாக உரையாடத் தொடங்கினுர்.

அவ்வெள்ளைக் கிழவருக்கும் எனக்குமிடையே அனுபாஷணை தொடர்ந்தது.

அதற்குள் வெயிட்டரும் வந்தான். அவர் ஒருபாட்டில் ''லைட்பீர்'' ஆர்டர் கொடுத்தார்.

அவர் அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்தவர். ஒரு டாக்டர்.

ஒரு மாறுதலுக்காக அவர் கப்பல் பிரயாணத்தை மேற்கொண்டு அமெரிக்காவிலிருந்து கல்கத்தா வந்திறங்கியுள்ளார்.

அவர் ஏறிவந்த கப்பலின் பெயர் ''சிட்டி ஆப் பெனரஸ்.'' அக்கப்பல் ''கிடர்பூர் டாக்ஸில்'' நின்றுகொண்டிருந்தது.

அக்கப்பலில் டாக்டர் ஒரு பிரயாணியாக வரவில்லை. அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்து, மீண்டும் அமெரிக்கா திரும்பிச் செல்லும் ஒரே பிரயாணத்துக்காக, அக்கப்பலின் டாக்டராக நியமனம் பெற்று வந்திருந்தார்.

அவரோடு அவர் மனைவியும் வந்திருப்பதாகவும் அவருடன் சம்பாஷித்ததிலிருந்து நான் அறியலானேன்.

டாக்டர் மெக்டர்மெய்டு - அதுதான் அவர் தெரிவித்த பெயர் - ஒரு புஸ்தகம் வாங்கவேண்டுமெனத் தெரிவித்தார்.

ஓ! பேஷாக, புஸ்தகக்கடைக்கு நான் அழைத்துச்செல்கிறேன்.

''ஒன்மினிட்'' என்று அவரிடம் சொல்லிவிட்டு, நான் வேகமாக வெயிட்டர் இருக்குமிடம் தேடிச்சென்று, டாக்டர் குடித்த பீருக்குப் பணம் செலுத்திவிட்டு, அவரிடம் வந்து போகலாம் என்றேன்.

அவர் சற்று தயங்கினுர்.

தங்கள் பில்லுக்கும் நான் சேர்த்துப் பணம் கொடுத்துவிட்டேன். நீங்கள்

எங்கள் நாட்டுக்கு விஜயம் செய்துள்ள விருந்தாளியல்லவா என்றேன்.

டாக்டர் மலைத்துப்போய் ஒன்றும் பேசவில்லை.

இருவரும் சற்று தூரத்திருந்த "வீலர் அண் கம்பெனி" என்ற புஸ்தகக் கடைக்குள் நுழைந்தோம்.

Hindu - Manners and Customs என்ற புஸ்தகம் வாங்கினுர். அப்புஸ்தகம் Abbu Dubois என்ற பெயர்படைத்த ஒரு வெளிநாட்டுப் பாதரியால் எழுதப்பட்டது.

புஸ்தகத்தை வாங்கிக்கொண்டு வெளியே வந்தபின் நடந்துகொண்டே டாக்டர் என்னைநோக்கி

"எங்கள் நாட்டுக்கு வருகிறீரா" என்ருர்.

"உங்கள் நாட்டுக்கா? மிகச் சுலபமாகக் கேட்டுவிட்டீர்கள். அங்கு எப்படிச் செல்வது" என்றேன்.

"நான் அழைத்துப்போகிறேன்".

"நீங்களா? ரொம்பவும் வேடிக்கையாய் இருக்கிறதே! நான் உங்கள் நாட்டில் வந்து என்ன செய்ய முடியும்?"

"உங்களை வெகு சுலபமாக ஒரு வியாபார ஸ்தலத்தில் சேர்த்துவிடமுடியும்"

"ஆனுல்......"

"ஆனுல் என்ன? You look very omant, You speak beuatiful English. Any body will take You in service."

என்னுல் யாதொரு பதிலும் சொல்ல முடியவில்லை. யோசித்துக்கொண்டே அவருடன் நடந்தேன். தெருவின் முனையிலே இருந்த மரத்தடியில் இருவரும் நின்ருேம்.

டாக்டர் என்னை மேலும் கீழும் நோட்டமிட்டார்.

பழுப்பு நிறமுள்ள சைனு சில்க் லூஸ் பேன்டும், ஷார்ட் கோட்டும், அழகான சில்க் டையும் அணிந்திருந்தேன். கால்களிலே பளபளக்கும் கோள்ட் மொகுர் ஷூஸ் — இங்கிலாந்தில் செய்யப்பட்டது. தலையிலே நேர்த்தியான Cork Helmet. தொப்பி!

அப்போது என் வயது 23. முகத்திலே சன்ன மீசையுடன் நான் வெகு துடியாகத்தானிருந்தேன்.

கோவையில் Stanes Boys Home அருகில் எங்கள் கடையும் வீடும் இருந்ததால் நான் சிறு பிராயத்திருந்தே வெள்ளைக்காரப் பையன்களுடன் கூடியும், விளையாடியும், குத்துச்சண்டையும் செய்து பழக்கமுற்றிருந்ததால், அப்பிள்ளைகள் போன்றே ஆங்கிலத்தை உச்சரித்துப் பேசுவேன். எனவே அந்த அமெரிக்கப் பெரியார் எனது தோற்றத்திலும், ஆங்கில உரையாடலிலும் தமது உளதினதைப் பறிகொடுத்ததில் அதிசயம் ஒன்றுமில்லை.

கப்பல் கம்பெனியுடன் தாம் செய்துகொண்டுள்ள ஒப்பந்தப்படி தம்முடன் உதவிக்கு ஒரு ஆளை அழைத்துச்செல்ல முடியுமாதலால் நான் தாராளமாக அவருடன் அக்கப்பலில் அமெரிக்காவும் போகலாம் என்ருர்.

If you would consent to act as my page, I will have no difficulty in taking you to the states என்பதே டாக்டர் மெக்டர்மெய்டு கூறிய வார்த்தைகள்.

நான் எந்த ஊர். என்னபடித்திருக்கிறேன். என்ன தொழில் தெரியும் என்று யாதொன்றும் அவர் என்னிடம் கேட்கவில்லை.

I was a dealer in millinery, drapery, Foot - wear ek. என்று அவரிடம் சொல்லி வைத்தேன்.

இறுதியில் அவருடன் அமெரிக்கா செல்வதற்குச் சம்மதம் என்றேன்.

டாக்டரும் நானும் ஒரு டாக்ஸியில் ஏறிக் கிதர்ப்பூர் துறை சென்ருேம். (Kidarpore Docks)

கப்பலில் ஏறி மேல்தளம் சென்ருேம். டாக்டர் தம்மனைவிக்கு என்னை அறிமுகம் செய்து, செய்தியைச் சொன்னர்.

அந்த அம்மாள், Wonderful என்று கூறி ஆனந்தமடைந்தார்.

பகல் உணவு டாக்டர் தம்பதிகளுடன் கப்பலில் சாப்பிட்டேன்.

கப்பலின் கேப்டனுக்கு என்னை அறிமுகப்படுத்துவதற்காக, அவரது அறைக்கு டாக்டர் என்னை அழைத்துச் சென்ருர். ஆனல் காப்டன் அச்சமயம் அங்கிருக்கவில்லை.

"சரி. காப்டனிடம் நான் சொல்லிக் கொள்கிறேன். எக்ரிமெண்ட்படி உங்களை அழைத்துச் செல்வதில் யாதொரு தடையுமிராதென நம்புகிறேன். உங்கள் பெட்டி படுக்கைகளுடன் இன்றிரவே கப்பலுக்கு வந்துவிடுங்கள். நாளை நண்பகல் கப்பல் கல்கத்தாவைவிட்டுக் கிளம்பும் என்ருர்.

தேங்ஸ் எ லாட் டாக்டர்! என்று சொல்லிவிட்டு, ஓட்டமும் நடையுமாக வெளியே வந்து ஒரு டாக்ஸியிலேறிக் கல்கத்தா ஹாரீஸன் ரோடு, 100 இலக்கமிட்ட எனது ஜாகைக்கு விரைந்தேன்.

அங்கே எனது பள்ளித்தோழன் முனிசாமி இருந்தான். அவனிடம் விஷயத்தைச் சொன்னதும் அவன் தலைகால் தெரியாமல் தை தையென்று குதித்தான். அவன் குதிப்பதைப்பார்த்து அந்தப் பாகத்தில் இருந்தவர்களெல்லாம் கூடிவிட்டார்கள். பெட்டி படுக்கையுடன் அன்றிரவே கப்பலை அடைந்து எனக்களிடப்பட்ட அறையில் தங்கினேன். மனதில் ஏற்பட்ட கிளர்ச்சியால் விடியும்வரை எனக்குத் தூக்கமே வரவில்லை.

விடிந்ததும் விடியாததுமாக எழுந்ததும் முகக்ஷவரம் முடித்து, குளித்து உடைகள்மாற்றி டிப்டாப்பாக டாக்டரின் அறைக்குச் சென்று அவருக்கு குட்மார்னிங் சொல்லிவிட்டு, டாக்டரின் அறையிலிருந்த சாமான்களையெல்லாம் துடைத்து ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தேன்.

நான் வந்ததும் வராததுமாக வேலையில் ஈடுபட்டிருந்ததைக் கவனித்த டாக்டரின் மனைவியார் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

முந்திய இரவே கப்பல் காப்டனிடம் டாக்டர் என்னைப்பற்றிப் பிரஸ்தாபித்திருந்தார்.

காலை ஒன்பதுமணிசுமாருக்கு எங்கள் அறைக்கு வந்த காப்டன் டாக்டரைப் பார்த்து

ஓ! இவன்தான தாங்கள் சொன்ன வாலிபன். நன்ருகத்தானிருக்கிருன். அவன் வைத்திருக்கும் பேப்பர்களை நான் பார்க்கலாமா என்ருர்.

என்ன பேப்பர் வேண்டும் என்ருர் டாக்டர்.

என்ன கேட்கிருர்கள் என்பது தெரியாமல் நானும் விழித்தேன்.

அவனுடைய பாஸ்போர்ட் என்ருர் கப்பலின் காப்டன்.

I carry no Passport என்றேன் நான்.

"அப்படியானல் டாக்டர் இவனை எப்படிக் கொண்டுபோகமுடியும்? கப்பல் இன்றே புறப்படுவதால் பாஸ்போர்ட் இல்லாமல் நாம் ஏற்றிச்சென்ருல் அது Kidnap திருட்டுக்குற்றமாகுமே"

என்ருர் காப்டன் மலர்ந்த முகத்தோடு. மற்றும் பாஸ்போர்ட்டும் விசாவுமில்லாமல் இவனை அமெரிக்காவில் இறங்கவும் அனுமதிக்கமாட்டார்கள் என்ருர்... டாக்டரும் அவர் மனைவியும் ஒருவரை

யொருவர் பார்த்துக் கொண்டு தங்கள் கைகளைப் பிசைந்தனர்.

கவலைப்படாதீர்கள் டாக்டர். நீங்களும் அம்மாவும் சுகமே போய் வாருங்கள். நான் விடைபெற்றுக் கொள்கிறேன் என்றேன்.

கப்பலைவிட்டுவெளியே வந்து ஒரு போர்ட்டரை விளித்தேன். பெட்டியும் படுக்கையும் எடுத்துக் கொண்டு, மீண்டும் ஒரு முறை டாக்டரிடம் விடை பெற்றுக்கிளம்பினேன்.

டாக்டரும் அவர் மனைவியும் கொஞ்சதூரம் நடந்து வந்து என்னை வழி அனுப்பிவைத்த காட்சி என்னால் விவரிக்க முடியாததாகும்.

அடுத்த அரைமணி நேரத்தில் நான் எங்கிருந்தேன் என்று சொல்லட்டுமா?

இரங்கோன் செல்லும் கப்பலின் மேல்தளத்தில் நின்று கொண்டு 'சிட்டி ஆப் பனூரஸ்' கப்பல் நிற்குந் திசையைப் பார்த்து மௌனமாக டாக்டர் தம்பதிகளை வாழ்த்தினேன். நான் நின்றிருந்த கப்பல் என்னை ஏற்றிக்கொண்டு இரங்கோனுக்குச் சென்று கொண்டிருந்தது.

இதைத்தானே எனையாளும் ஈசன் செயல் என்றார் ஔவைபிராட்டியார்?

# பிரமை

"துறைவன்"

கோவிலின் வாசலில்
கோபுர நிழலில்
குவிந்து கிடந்தன காலணிகள்
தேவ தரிசனத்
திருவருள் இன்றித்
தேம்பி முடங்கின தோலணிகள்

தரையில் வீசிய
வலைமீன் சிதறித்
தாழ்ந்துயிர் பொன்றுதல் போலெங்கும்
நிரைபல கண்டேன்
நெஞ்சுநெ கிழ்ந்தேன்
நெடுந்துயர் தீர்க்கும்வழிகா ணேன் !

கண்விழி பிதுங்கக்
கடுமூச் செறியக்
காலணிமீன்கள் பதைத்தனவே
மண்ணினை நீத்து
மரணக் கடலில்
பாய்ந்துயிர்தேட முனைந்தனவே !

அன்னை கடைக்கண்
அருள்திறந் திட்டாள்
அடைமழை சோவெனப் பொழிந்ததுகாண் !
என்னே அதிசயம் !
என்னே அற்புதம் !
எங்கணும்வெள்ளம் புரண்டது காண் !

கோவில் வாசலில்
கோபுர நிழலில்
குழுமிய காலணிமீன்களெ லாம்
தாவின துள்ளின
தாய்துதி பாடின
தஞ்சம் புகுந்தன வெள்ளத்தில் !

கனவோ நனவோ
காட்சிப் பிழையோ
கடவுள் ஆணை நானறியேன் !
எனினும் தனிநான்
இனிதே நெஞ்சம்
இரங்கியதந்த மீனறியும் !

நூல் விமர்சனம் :

# காவைமுருகன் பிள்ளைத்தமிழ்

— பண்டித வித்வான் தி. வே. கோபாலய்யர்

ஆனைக்கா அன்பர் கவிஞர் கலைவாணன் அவர்கள் தமிழ் அன்னையின் இணை அடிகளில் காணிக்கையாக அண்மையில் படைத்துள்ள காவைமுருகன் பிள்ளைத் தமிழைக் கண்ணுறும் வாய்ப்பினைப் பெற்றேன்.

புதுமுறைக் கவிதைகளிலேயே கவிஞர் உள்ளமும் சுவைஞர் கருத்தும் ஈடுபட்டு இலங்கும் இற்றைநாளில் பிள்ளைத்தமிழ் பாடுவாரும் உளரே என்ற வியப்போடு நூல் முழுவதையும் நோக்கினேன். இத்தகைய நூல் தேவைதான் என்ற உறுதி ஏற்பட்டது.

குழந்தையைப்பாடும் மரபு பழந்தமிழகத்திலும் உண்டு என்ற செய்தி 'குழவி மருங்கினும் கிழவதாகும்' என்ற தொல்காப்பிய நூற்பாவால் போதரும். நம்மிடையே குழந்தையாகவும் காட்சி வழங்கும் கடவுளர் கண்ணனும் முருகனுமே. அவருள் கண்ணனுடைய குழந்தைப் பருவத்தில் ஈடுபட்ட பெரியாழ்வாரின் பாசுரங்களே பிற்காலப் பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்திற்கு அடிகோலின. பிள்ளைத் தமிழ்பற்றிய இலக்கணம் பாட்டியல் நூல்களில் பரக்கக் கூறப்பட்டுள்ளது. தெய்வங்களையும், மனிதருள் மிக்கோரையும் குழந்தைகளாகக் கற்பனைசெய்து தமிழ்க் கவிஞர்கள் பாடிய பிள்ளைத்தமிழ்கள் தமிழில் பல உள. பெரும்பாலும் உயர்வு நவிற்சியணியையே அடித்தளமாகக்கொண்டு சிற்சில புதுப்புனைவுகளை இடை அமைத்து அவை பாடப்பட்டுள்ளமை தேற்றம்.

கலைவாணன் அவர்கள் பாடியுள்ள பிள்ளைத்தமிழ் பழைய கலத்தில் புதிதாக வடித்து வார்க்கப்பட்ட புதுத்தேனாகும். பழைய மரபினை ஏற்றுபெற்றிகொண்டு இக்காலத்திற்குஏற்ற புதுக்கருத்துக்கள் பலவற்றையும் இடம்நோக்கி அமைத்திருக்கும் திறம் அவரை உண்மைக் கவிஞராக உணர்வதற்கு நல்ல வாய்ப்புத் தருகிறது.

சிவபெருமானே முருகனைத் தோன்றியவன், அவன் அருளிய மொழியே தமிழ், முருகனே தமிழ்க்கடவுள், போன்ற பழைய செய்திகள் தமிழர் தம் உள்ளத்தில் அசைக்க முடியாத உறுதிபெற்றன ஆதலின் அவற்றை,

'ஆணொடு பெண்ணும் அதான சிவத்தினது ஆறுமுகப் படிவம்'
'காபாலி ஈன்ற ஒரு மாபாடையாந் தமிழ்'
'தமிழாம் பழைய தனம் தரும் என்அப்பன்'
'தண் தமிழர் தம் தெய்வமே'
'காவை நகரத்து உள்ளே இருந்த பெருந்தமிழன்'
'நெடிய தமிழ்க்கு ஓர் தலைவன்'
'தமிழ்க்குலப் புண்ணியம் முற்றிலும் உருவெடுத்தசேய்'
'வண் தமிழ் ஈந்து உலவக் கொண்டமுதற் சூரவன்'

என்ற தொடர்களில் ஆசிரியர் சுட்டி உள்ளமை காண்க.

'உவமப் பொருளின் உணருங் காலை
மரீஇய மரபின் வழக்கொடு வருமே'

என்பது மரபு ஆதலின் எல்லோருக்கும் செய்திகள் நன்கு விளங்குவதற்காகவே உவமங்களைக் கையாளும் பண்டை மரபினை உட்கொண்டு இக்கால நடைமுறையில் காணப்படும் பொருள்களைக் கையாண்டு கார்மேகம் கவிந்தமைக்குக் காட்டேரிக் கூட்டத்தின் கவிதலையும், முருகப்பெருமானுடைய மயிலின் நாட்டியத்திற்கு அந்தரமீதினில் ஆடி அசைந்திடும் கதர்க்கொடியின் ஆட்டத்தினையும், முருகன் சாய்ந்து ஆடுதற்குச் சாளரங்களில் இடப்பட்டிருக்கும் திரையாகிய

துகில் காற்றில் ஆடுதலையும், பொருள் அறியாது ஒருவர் சடங்குகளைச் சொல்ல மற்றவர் அவற்றைப் பின்பற்றிச் செய்தலுக்கு இருளிடை அழும் குருட்டுக் குழந்தை ஒன்று மற்றொரு குருட்டுக் குழந்தைக்கு வழிகாட்டுதலையும், வான்வெளி வீரர் மதியத்தினுள் இறங்கி அதன் செய்திகள் பலவற்றையும் வெளிப்படுத்திய பின்னும் அது தன் பண்டைப்பெருமையை நினைத்திருப்பதற்குப் போலிப் பகட்டில் வாழும் பொருளாளர் தம் நினைப்பினையும், பிரிவினை, கடமையை மறந்த உரிமை, திவினைபுரியும் விஞ்ஞானத்தின் செயல், மூடச்சழக்குக்கள் தரும் தீமை இவற்றிற்குப் போரிடுதற்குவரும் ஆட்டுக்கடாவினையும் உவமங்களாகக் கூறியிருக்கும் பகுதிகள் வாசிக்குந்தோறும் உள்ளத்தில் ஊன்றிய இன்பம் பயப்பனவாம்.

சண்டேசர், மெய்கண்டார், சிவஞானமுனிவர், வடலூர் வள்ளலார் இவர்களிடம் ஆசிரியர் பூண்டுள்ள பெரும்பக்தி வியக்கத்தக்கது.

இன்றைய உலகம் உய்வதற்குக் குடவோலை வாயிலாக ஊர்ச்சபைத் தேர்தல் நிகழ்த்திய இராசராசன், பஞ்சாயத்துப் பேரரசுக்கு வழிகோலியகாந்தியடிகள், சித்தாந்த சமதர்மத்திற்கு வழிவகுத்த காரல் மார்க்ஸ், மொய்த்த பழமுறையின் குறைகள் முடிந்து ஒழியத் தமிழைப் புதுக்கி அருள்புரியும் வடலூர்ப் புண்ணியனார் ஆகியவர்கள் குறிப்பிட்டுள்ள செய்திகள் நன்கு செயற்படுவதற்குக் கவிஞர் முருகன் அருளைவேண்டுகிறார்.

அம்புலிப்பருவத்தில் மனித இனத்தில் விஞ்ஞான வெற்றி,

மானிடம் மயங்கிஉனை மண்என்று நேரநது
மாழ்கிக் கிடந்த தெல்லாம்
மாண்டகதை ஆகியபின் விண்கருவம் ஏன்உன்னை
மனையாக்கி விட நினைந்த
நானிலத்து உயிர்களே பெருவெற்றி காண்கின்ற
நாளில்வின் பிடிவாதமோ

எனவும்,

கதியற்ற மனம்இன்று புதியவிஞ் ஞானக்கை
காட்டும்ஒரு வழி விரைந்தே
ககனவெளி மிதில்உன் சகசநிலை ஈதுஎனக்
கண்டுஇவிது விண்டுரைக்கும்

எனவும்,

.........உனது வெண்மைநிற உருவுகண்டு
ஒன்றுக்கும் உதவாமலே
உயரத்து இருக்கின்ற கற்பாறை தான்என்று
உணர்த்தி விஞ் ஞானம்எங்கள்
கண்ணைத் திறந்திட்ட பின்வரும் ஏய்ப்பதேன்

என்றும்

கவிஞரால் இயைபுபற்றி உரைக்கப்படுகின்றமை காலத்துக்கு ஏற்ற வரவேற்கத்தக்க புதுக்கருத்தாகும். புதிய கருத்துக்களோடு பழைய கருத்துக்களையும் மெருகேற்றிப் புதுப்பிக்கும் செய்தியை

கவிராயர் பலர்உனைக் கற்பழித் திடநிஓர்
கடைகேடி ஆன தறிவோம்
காலம்உன் மேனியில் தொழுநோயை விசிடக்
கரைகின்ற அதுவும் அறிவோம்
குவியாத காமவெறி கொண்டுநீ செங்கதிர்க்
குமரனைச் சுற்றி வந்து
கும்பிட்டு நிற்பதனை அம்புலியும் வான்உடுக்
கூட்டமும் நன்கறியுமே
அவியா மயற்சுரத்து அவசமாய் விட்டநீ
ஆடையில் லாது அலைவதால்
ஆத்திரம் கொண்டுஉனைப் போர்த்தும்வெண் முகில்களின்
ஆதுர மெலாமறிகுவோம்

என்ற பகுதியில் காண்க.

இக்காலத்துச் சமூக அரசியல் ஊழல்களைக்கண்டு முருகப்பெருமான் நகை செய்வதாகக் கூறப்படும் கற்பனை இப்பிள்ளைத் தமிழிற்கே பேரழகு செய்வதாகும்.

உரிமையை நினைந்துநம் கடமையை மறந்திடும்
உழைப்பாளர் கூட்டம் எங்கும்
ஓலமிட் டலைகின்ற கோலத்தை நோக்கலின்
உதிக்கின்ற புன்சிரிப்பும்

புரியாத வகையில்இப் புவியைச் சுரண்டவே
    போந்தமுத லாளர் கூட்டம்
புனைசுருட்டால் உலகர் அனைவரும் கெடல்கண்டு
    பொங்கிடும் புன்சிரிப்பும்
நரிஒப்ப இங்கிவர்தம் நடுவில்புகுந்தினிய
    நயவஞ் சகப் பேச்சினல்
நாடாள முன்வரும் நஞ்சரைக் காண்டலால்
    நண்ணிடும் புன்சிரிப்பும்
விரிகின்ற உதயத்து வெயிலொத்த இதழ்குவிய
    மெல்வாயில் முத்தம் அருளே

என்ற பாடலையும் அதன் முன்னிரண்டு பாடலையும் நோக்குக. முருகப்பெருமான் திருவேலே தீயர் செய்யும் துயர் துடைத்தல் வேண்டும் என்று கவிஞர் இயம்பும்

வாய்க்கினிய பேச்சினல் வாக்காளர் நடுவிலே
    வந்துபின் தலைவர் ஆகும்
வாய்ப்புற் றதும்தங்கள் ஏய்ப்புத் திறத்தினல்
    வல்லரசர் போல வாழும்
பேய்க்குணப் போதையால் பேதுற்ற நாட்டைப்
    பெரும்பாலை ஆக்கி விட்டுப்
பித்தக் கிறுக்கினில் கத்திக் குதித்திடும்
    பெற்றியைக் கண்டு நெஞ்சம்
தீய்க்கும் சினத் தொடுஅத் தீயர்மேல் ஏவிடத்
    தீட்டுவடி வேலொளியுடன் ...... விளங்குவாய்

என்ற பகுதி இந்நாட்டைக் கடவுள்தான் காத்தல்வேண்டும் என்ற பெரியோர் கூற்றை வலியுறுத்துவதாகும். காவைப் பெருமானுடைய கைப்பறை முழக்கில் கதிகலங்கித் தீயவை தொலைய நல்ல சமுதாய நலன் உருவாகுக என்று கவிஞர் கூறுஞ்செய்தி இன்றைய நாட்டுநிலையின் உயிர் ஓவியமாகும்.

அழியட்டும் மானுடர்க்கு ஆகாத நாயெழுந்து
    அக்கிரம வழியில் நின்றே
ஆளும்அர சாட்சியும் அநியாய முறைகளும்
    அடிவேர் அறுந்து கடிதின்
கழியட்டும் ஒவ்வாத கதைகள் பல கூறிக்
    கருத்தைக் குழப்பி விட்டுக்
கைவரிசை காட்டியே வையத்தை ஆள்கின்ற
    கபடசம யங்கள் எல்லாம்
ஒழியட்டும் உலகத்தில் ஒருவர்மற் றொருவர்தம்
    உழைப்பைச் சுரண்டி இன்ப
உச்சத்தை எட்டிடும் பச்சைத் திருட்டுவாழ்வு
    ஓயட்டும் இழி வளைத்தும்
இழியட்டும் மண்ணுலகை ஏய்த்துப்பல் வேடமிடும்
    எத்தர் தம் தலைமை.

என்ற அடிகளை நோக்குக.

எதன் கண்ணும் மேலோட்டமாகவே அறிவைச் செலுத்துதலையே விரும்பும் இக்காலமக்கள் உளநிலைக்கு ஏற்பப் பருவத்திற்குப் பத்துப்பாடல் பாடிய மரபை விடுத்து ஐ வைந்து பாடல்களே பாடியுள்ள திறனும், தாம் கையாளும் முறைக் கேற்பக் கடவுள் வாழ்த்தினையும் ஐந்து பாடல்களாக அமைத்த அழகும், பண்டைப் பருவங்களோடு துயிலெழற்படலம், தகர் அடக்கு படலம், வேலோச்சுபடலம் எனக்காலத்திற்கேற்பக் கடவுள் இறைமையொடு சிவணி முப்படலங்களையும் கோத்த வனப்பும் பிள்ளைத்தமிழ் உலகில் ஓர் அழகிய தேவையான புதிய திருப்பத்தை அளித்து இனி ஏனைய பிரபந்தம் பாட வருவாருக்கும் இனிய வழிவகுத்துக் கொடுப்பனவாய் அமைகின்றன.

நாளும் வளரும் மொழியில் பண்டைச் சொற்களையே பொறுக்கிச் சேர்த்துப் பாடுதலை விழையாது இக்கால வழக்கில் பெரிதும் வழங்கும் அழியட்டும் முதலிய வினாவிகற்பம், ஆச்சரியிக்க, இசங்கள், இடது, உசுப்பிட்டு, எத்தர், கதிட்டும், கும்மாளம், கும்மாளி, சுந்தரியாள், தெண்டி, புப்புது, மத்தி, மனது, முண்டிவரும், மூதாட்டியாள் முதலிய சொற்கள், ஆகியவற்றையும் பயன்படுத்தியுள்ள தன்மை தமிழ் நலத்திற்குக் குறைவுதாராத வகையில் கையாண்டுள்ள செய்தி இலக்கண வரம்பை மதித்துப் பாடும் இக்கால நற்கவிஞர்களுக்குக் கைகொடுப்பதாகும்.

இக்கவிஞர் போலவே வளர்கின்ற கவித்துவத்தை நாமும் வாழ்த்தி அமைவோம். *

# Illusion and Reality - A Note on Cleopatra's Dream

By. K. G. Seshadri, M. A.

Cleopatra, Antony's blessing and his bane, grows in stature in the last scenes of the play 'Antony' and Cleopatra'. The death of Antony wreaks a sea-change in her total attitude to life: she is no longer the woman of the varying moods, whose passions come and go as the changing seasons. She is now from top to toe 'marble-constant'. 'Now the fleeting moon, no planet is of mine' she declares preparing to receive the gardener who brings her the deadly asps of Nilus.

To Dolabella who relieves Proculeius, Cleopatra speaks of a dream she dreamed in lines which constiture one of the finest examples of sheer imaginative poetry. At first glance it looks like a grief-stricken woman's panegyric-lament without any relevance to the facts of the situation. In other words there seems to be a great gap between the illusion and the reality, between the Fancy of the Woman in the grief of love and the fact of the Man in his Decline and Fall maugre his many heroic virtues. It is my purpose here in this paper to account for and to explain if possible this apparent ambivalence behind the situation. It will be necessary to go in depth, into the whole concept of heroism and love before we can arrive at an acceptable synthesis between the two.

> His legs bestrid the ocean; his reared arn crested the world; ... ..
> ... .. element they lived in;
> (*Act V Sc. II* 82 *to* 90)

The Hero is never a hero forever; heroes of one age or generation, cease to be heroic in the next. Sometimes, even during a life-time we see values change. Antony's rise and fall also comes under this natural law. We have only to go back to an earlier generation in the history of Rome and her people to recognize the truth of this. The first triumvirate of Rome was made up of Marcus Crassus, Cneius Pompey and Julius Caesar. Crassus the general who quelled the Slave revolt of 71 B. C. led by Spartacus was himself captured by the Parthians who poured molten gold down his rapacious throat and so killed him. Pompey the Great had his day and ended up finally as an honoured statue forgotten by 'ungrateful Rome'. Julius Caesar the greatest of them all, in turn falls at the hands of the assassins 'even at the base of Pompey's statua' in the capital. And so we come to the Second triumvirate of Mark Antony, Octavius Caesar and Lepidus.

After the fall of Lepidus -whose exit is scarcely noticed Antony and Caesar Octavius face each other the world now becoming no more than a morsel between these two giant 'chaps'. Each hero is in turn supplanted in the minds and hearts of his people when his day is over. Thus heroism is not an enduring thing to be affixed like a convenient label to any individual in perpetuity. Antony was the greatest soldier of his time after the fall of Julius Caesar. But to him there came a time when war-making was no longer as important as love-making and that was when he met his destiny in the shape of the Queen of Egypt at the mouth of the river Cydnus.

The Antony of Cleopatra's dream is the Antony as she had cherished him in her heart-the object of her Grand passion. It is enough for her that he had been a great hero once. As Browning puts it 'There shall never be one lost Good'. This is perhaps too, what Wordsworth had in mind when he spoke of the 'Primal sympathy, which having been must ever be' in his Immortality Ode. This is her Antony as he had always appeared to her; it does not matter to her how he appears to others or even how the

facts appear to be (for facts do not make up truth, not always). His death brings out her man of men in true perspective the faults of her hero which the critics and the casual reader make so much of, aggregating to nothing before her romantic insight into the true nature of her lost lover. His faults are lost in the dazzling splendour of his great qualities as her Roman. She feels it powerfully and as Keats calls it it is the 'holiness of the Heart's Imagination' which is operating here as the prime mover. Being essentially a union of two sensualists, the two lovers make a perfect match each finding the other lost half of the original whole.

She had had quite some experience of men-of all sorts - (if we are to believe an angry Antony) - and it was only in her 29th year, in the 'embonpoint' of her beauty and in full bloom that she meets her greatest lover. Setting out to snare him in her strong toils of grace, she finds herself trapped by the manly graces of her bearded lover, the Herculean Roman Antony. To this union each brings a whole range of varied sexual experience - the gallant Antony being a typical product of the decadent pleasure-loving Rome and the playboy of the Raman world, - and the bewitching Egyptian with her unquenchable appetites and varied amatory experiences - first with her sissy of a brother-husband the Ptolemey and then the aging Caesar who came to conquer Egypt but stayed to leave an heir behind, then the Great Pompey who would let his eyes grow on the face of Cleopatra - and finally Mark Antony - greying, middle-aged but still capable of sexual heroics. 'Le homme moyen sensuel' seems to be a powerful thing indeed. Few can resist its deadly power. 'With time's winged chariot always drawing near', and every grey hair and wrinkle ruthlessly and urgently reminding them of the fleeting of time beneath their feet, there is an urgency about Antony's insistence. 'There is not a minute of our lives but should stretch without some pleasure new'. If to Antony their love is more important than the ranged empire, to her life is nothing without her lover by her side. She cannot abide easily the great gap of time her Antony is away and she needs mandragora to forget herself in dreamless sleep. Thus these two greatest lovers of all time who cared nought for the world but still found the same imparadised in one another's arms, have an entirely different perspective from ours - the reader's and the critics. Let us take a closer look at the lines under review, from the point of view of the ladylove.

"Thy spirit's sister, the lorn nightingale, mourns not its mate more melodiously' sings Shelley. Such is the melody and truth in the grand picture of Antony that emerges from the speech of Cleopatra. His legs bestrid the ocean - his eyes are like the sun and the moon - his face was as the very heavens - everything is conceived in titanic proportions. She makes him out to be a giant and ruthless lover. There seems to be a suggestion of hidden sensuality in the phrases used by her. The legs bestring or straddling the ocean - an almost phallic symbolism - the ocean being the fathomless sensuality of the woman. He could be the gentlest of lovers - his voice being propertied as the tuned spheres, to friends only. He could be most ruthless like rattling thunder on occasion. As for his bountry there was no winter in it' — there always being more where it came from, no dearth of this precious good (so perhaps it is, she does not survive Antony as she survived the earlier lovers Pompey and Caesar); In him she found the answer to her fierce passions. 'An Antony it was that grew the more by reaping' She could always be sure of a rich harvest of love Unlike the field which has to lie fallow for a time after the harvest, this grew the more by reaping! There was no winter in it. "An Antony it was" (original folio reading which Theobald mended to **Autumn't was**) - because for the sheer pleasure she reaped, no other name could be given - Antony becomes the name for that unit of pleasure (like volt or ohm.) This interpretation gains in validity from the next lines - his pleasures were dolphin - like. Like the dolphins, he could never lose himself in pleasure but could always keep himself afloat without getting lost in the ocean which his legs bestrid.

He could never lose himself at the height of his passion as most men do but be conscious of himself and his act, of giving and getting pleasure even when he was 'dying in the act'.

No wonder the grateful girl remembers her great lover with great regret. For the chief element in Cleopatra's make - up is love and she lives only for it. So, what she says in her dream speech is the gospel truth, whatever the rest of Rome may say about Antony. He was her man of men and it is she who has lost him and it is she who is dreaming. Hence the dream is not a mere dream but the reality for her. There is actually no gap between the dream and the reality so far as she is concerned.

Cleopatra is herself described as 'o'erpicturing that Venus wherein we see that Fancy outworks Nature', by that most hard - boiled cynic Enobarbus himself. She herself has recourse to the same phraseology in describing Antony a few lines later. 'Nature wants stuff to vie strange forms with fancy; yet to imagine an Antony were Nature's piece against Fancy, condemning shadows quite'.

Her fancy is at work aided by the "holiness of her heart's imagination", to produce an Antony more real than the shadows of mortality can effect. There is therefore no gap between fancy and fact here. The gulf if any, is bridged by the great flood of Love that is the ruling passion of her life. ★

---

# ஸ்ரீமான் சோம்பலும் சுறுசுறுப்பும்

— கோவை. அ. அய்யாமுத்து

சோம்பலோடு சுறுசுறுப்பு சண்டைசெய்தது — சோம்பல்
சோர்வடைந்து, தொலைவில்சென்று, சாய்ந்துகொண்டது

சுறுசுறுப்பு தொழில்புரிந்து செழுமைபெற்றது — சோம்பல்
தொங்குசெலாம் போட்டுக்கொண்டு தெருவில்நின்றது.

சுறுசுறுப்பு மேலும்வெற்றி நடைகள்போட்டது — சோம்பல்
தெருக்களிலே கூட்டம்போட்டுக் கேள்விகேட்டது.

சுறுசுறுப்புப் பாடுபட்டுச் சுகத்தைக்கண்டது — சோம்பல்
சோற்றுக்காத் தாளம்போட்டுத் தெருவில்சென்றது.

சோசலிசம் என்றகூச்சல் வானைப்பிளந்தது — சோம்பல்
தூக்கமின்றி எங்கேயென்று வாயைப்பிளந்தது.

இமயமலை போன்றுசோற்றைக் குவித்திருந்தாலும் — அதை
எடுத்துச்சோம்பல் வாயினிலே புகுத்திடவேண்டும்.

# Why is Jesus Christ dear to a Hindu ?

*From the speech delivered by T. N. Ramachandran, at the Dialogue Club of Thanjavur, on 5--3--1970.*

The greatest of Tamil epic poets, Kamban under the pretext of describing the river Sarayu explains the concept of Godhead thus :

"The River Sarayu springs from the Himalayas and ultimately merges with the sea. Even as Godhead remains indefinable maugre the explanations of the boundless scriptures, the River runs indefinable, a unit to begin with but slowly and gradually spreading into various places multifariously (like the very Godhead hailed as one and manifold by the multitudinous religions mighty)."

The Almighty - Unique Single- becomes a Trinity and even a Multiplicity, so that the human mind may essay to ken and comprehend It. Different names and forms are assumed by the Almighty for the easier prehension and comprehension of the ordinary mortal.

And it is the belief of the Hindu that all religions emanate from God and lead to God. This can be explained better by a simple example. All of us are familiar with the name Binny and Co. They are the wholesalers for cloth and textile products. Every shop owner dealing in textiles buys from Binny and Co., and vends its products. However each shop owner claims that his is the best shop in the city and that the citizens therefore must particularly patronise him. Likewise every religion which receives its revelation from god claims that it is the only true religion that leads to god. The Hindu who is eclectic knows this and accepts it as a matter of theological truth that god indeed is the author of all the religions. In this sense, every religion is entitled to the esteem of the Hindu. More so, the religion of the followers of the Christ.

"Daivam manusha rupena" - "god is realised in the form human", is a dictum dear to the Hindu mind. God in his ineffable and unapproacheble state dazzles man. In spite of his best efforts man may know nought of god. In this state god is more feared than loved. The very expression 'God-fearing' explains this. However when God deigns to assume the human form, He is so near unto man that His very accessibility (soulabya) is a cup of nectar to man. In this connexion the opening passage in Paradise Lost, where Milton invokes the divine muse, may be quoted with advantage.

" Sing Heav'nly Muse, that on the secret top
Of Oreb, or of Sinai, didst inspire
That shepherd, who first taught the chosen seed,
In the beginning how the Heav'ns and Earth
Rose out of Chaos: Or if Sion Hill
Delight thee more, and Siloa's Brook that flow'd
Fast by the Oracle of God; I thence
Invoke thy aid to my adventurous Song."

*P. L., Book I, Ll 6 to 13*

It is common knowledge that Sinai and Sion are sometimes strangely contrasted in the Holy Writ,for they seemed to symbolise contrary attributes of Jehovah; Sinai His Power and majesty and unapproachableness; Sion His love and faithfulness and nearness. Moses wrote on Sinai; David and Isiah on Sion.

Sinai is symbolic of Jehovah in his ineffable and unapproachable form. Sion is symbolic of the son of the God in his loveable and accessible form. The way to Jehovah is via the son of the God-the Christ, the Xavier of mankind and its Messiah. It is only in the human from the Christ chose to redeem the fallen man. As the Christ descended as man, mankind has been sanctified. This beautiful concept is wonderfully depicted by poet Triloka Sitaram in his poem "On the Glory that is the christ." The Tamil verse runs thus :

" காசினி கால்கள் தோயார்
கண்ணிணை இமையார், வானப்
பூசனை கொள்ளும் தேவர்ப்
புகழிணைப் புவியோர் காணுர்.

தரையினிற் கால்கள் தோய்ந்தும்
தயவுடன் நடந்து வந்தும்
விரைந்துயிர்க் குலமே வாழ
விழியிணை இமைத்திருந்தும்

பிறர் பிறர் பாவம் தோளில்
பிறங்கிய சிலுவை தாங்கி
இறப்பெனுங் கடை நாள் புக்கும்
எழுந்தவன் மீண்டு வந்தான்.

தனியொரு சூலில் தெய்வத்
தண்ணளி விளைந்த தாலே
இனியிலை துயரென் றிந்த
இரு நிலம் மகிழ்ந்து போற்றும்

அன்னவன் மனுக்குலத்தின்
அண்ணலென் றறிந்து கொண்டோம்
மன்னவன் பிறந்த மாண்பில்
மானிடர் உயர்ந்து விட்டோம்."

" Their feet the Earth touch not
Their eyes wink not; they are Divine
Who our sacrifices accept
Of their glory the earthlings know not

The feet did touch the Earth
And in grace did tread
The eyes did wink
That lives on the Earth may flourish

The sins of others, on his shoulder
As cross He bore and though
He into Death barged, the end of Life
Yet into Life back he burgeoned.

In pregnancy unique, abounding grace
Of divine mercy bloomed
'Hence is grief no more' the Earth proclaims
And in glory sure rejoiceth.

Behold Him the great One
The xavier of mankind
And by his Birth
Is man ennobled."

The Power, the Majesty and the Unapproachableness of the Almighty are symbolised by the feet that touch not the earth and the eyes that wink not. The Love, the Faith and the nearness of the son of God are symbolised by the human form of the son of God which willingly bore the cross - the sins of mankind, for the redemption of mankind.

When the Almighty, awful, terrible and all-powerful chose in his divine pleasure to shower grace and mercy on all, He recreated Himself in His son. Of this divine event, Milton sings. Let us hear the utterances of the Almighty.

" Hear, all ye Angels, Progeny of Light
Thrones, Dominations, Princedoms, Virtues, Powers,
Hear my Decree, which unrevok'd shall stand.
This day I have begot whom I declare
My only son, and on this holy Hill
Him have anointed, whom ye now behold
At my right hand; your head I him appoint;
And by my self have sworn to him shall bow
All knees in Heav'n, and shall confess him Lord :
Under his great Vice-gerent Reign abide
United as one individual soul
For ever happy; ... ...
... ... ... ...
... ... ... ...

" So speak th' Omnipotent, and with his words
All seemed well pleas'd, all seemed, but were not all."

There was one disappointed soul which ultimately lost its soul. It was Satan, the adversary of God. This infernal serpent betrayed the Lord, seduced the Grand Parents, Adam and Eve from righteousness, and sowed the seeds discord and disobedience.

Even when Satan was proceeding from the nethermost part of Chaos borne by the trustless wings of False desire, to befoul the estate of Man, his flight did not escape the eyes of the all-seeing Almighty. Witnessing the flight, God summoned Raphael and told him to warn Adam and Eve of the impending danger. The Eternal Father by this act fulfilled all justice.

The great Lord knew what would happen and said that Satan

"... shall pervert
For man will hearken to his glozing lies
And easily transgress the sole command
Sole pledge of his obedience : So will fall
He and his faithless progeny."

God had spoken and His will would be done on earth as in Heaven. But the son of God, with love without end interceded and pleaded for man. It was at this request God was prepared to renew the lapsed powers of man, though on one condition. He spake :

"... Man disobeying
Disloyal breaks his fealty and sins
Against the high supremacy of Heaven
Affecting Godhead and so losing all
To expiate his Treason hath nought left
But to destruction sacred and devout
He with his whole posterity must die
Die he or Justice must; unless for him
Some other able and as willing, pay

The rigid satisfaction, death for death.
Say Heavenly Powers, where shall we find such love
Which of ye will be mortal to redeem
Man's mortal crime, and just the unjust to save,
Dwells in all Heaven charity so dear ?"

He asked but all the Heavenly quire stood mute and silence was in Heaven.

" And now without redemption all mankind
Must have been lost, adjudged to death and hell
By doom severe, had not the son of God
In whom the fullness of love divine
His dearest meditation (thus) renewed."

The son of God then spake :

" Behold me then, me for him, life for life
I offer, on me let thine anger fall
Account me **man,** I for his sake will leave
Thy bosom and this glory next to thee
Freely put off, and for him lastly die.
... ... ... ...
Though now to Death I yield and aim his due
... ... yet that debt paid
... ... ... ...
I shall rise victorious and subdue
My vanquisher, spoiled of his vaunted spoil
Death his death's wound shall then receive and stoop
Inglorious of his mortal sting disarmed.

And Death did meet with death at the hands of the son of God. And the son of God did ultimately shine in supernal splendour like Kaala Kaala(the Destroyer of the Destroyer Death), the Lord Shiva of the Hindu Scriptures.

Tirumoolar, the Tamil saint defined Lord Shiva as Love. We know the son of God, Jesus, as Love. The Son of God willingly forsook the Kingdom of Heaven to tread the Earth in mortal coil. He called himself a man and asserted the triumph of man over evil. Even as Rama, the Hindu god prided in calling himself a man and willingly underwent all the torments and tribulations of a human being, the Xavier descended down and walked the earth in mortal weeds enduring in full the fire of anguish and agony begotten by the sins of men. The achievement of Jesus is the achievement of man. Let us hail it in Kamban's words. 'மானுடம் வென்றதம்மா'.

As Poet Triloka Sitaram says

" Behold him the Great one
The Xavier of mankind
By his Birth
Is man ennobled."

Neither Earth nor Heaven has anything more fair to show than the sweet reasonableness and the surpassing sacrifice born out of unbounded love of the Christ.

( To be continued )

# பிதாமகரின் கடிதங்கள். 7

— திருலோகசீதாராம்

அம்ருத குமார,

யாக்கை, இளமை, செல்வம், காட்சி, கருத்து எதுவும் நிலையாததே என்னும் உண்மை மனிதனுக்குத் தெரிந்தே இருக்கிறது. ஆயினும் பிறவி என்று எடுத்துவிட்ட பிறகு வாழ்வென்னும் உண்மையும் அதன் பிரச்னைகளும் அவனைப் படாதபாடு படுத்துகின்றன. பசியும் தாகமும் தீர்வதில்லை, நரை, திரை, மூப்பு, மரணம் வருவதைத்தடுக்க முடியவில்லை, இந்த ஏக்கம் அவனுக்கு என்றுமே இருந்து வருகிறது. இவை ஏதுமற்ற மகிழ்ச்சியே வடிவான ஒரு நிலையை அடையவேண்டுமென்ற ஆவலும் வளர்ந்துகொண்டேயிருக்கிறது. இந்த ஏக்கமும் ஆவலும் விளைத்த வேகமே அவனது சிந்தனைப்பாதையை நீளச் செய்கிறது. அந்த நெடுவழியில் பெற்ற திருக்காட்சிகளே தத்துவங்களாகத் தெளிவு பெற்றுள்ளன.

பேரறிவாளர்கள் தங்கள் ஆழ்ந்த சிந்தனையின் உள்உணர்வால் தெளிந்த செய்திகளை மனிதகுலம் அறிந்து பயன் பெறுமாறு அருளிச்செய்துள்ளனர். இவ் அருளிச்செயல்களுக்கு மொழியைத்தவிர வேறு சூழ்ச்சியில்லை. மொழிகள் மனிதகுமாரனுடைய அறிவின் வரம்பில் விளைந்த சொற்களையுடையனவாய் உள்ளன. அருளிச் செயல்களோ அவனது அறிவின் வரம்பைக்கடந்த வெளிச்சங்களை வழங்க வேண்டியவையாகும். எனவே மனிதர் அறிந்துள்ளமொழியும் அவற்றின் சொற்களும், கண்டிருக்கும் காட்சிகளும், கருதிப் பார்த்திருக்கும் கோட்பாடுகளும், அவர்கள் இனிஅறியவேண்டிய வெளிச்சங்களைத் தாங்கவேண்டியவை ஆகின்றன.

இவ்வாறு பெரும்பாரம் சுமந்துள்ள சொற்களை அவை பிளந்து இற்றுப்போகாமல் அவற்றின் பொருட்செறிவை நமது அறிவில் லாகவமாக வாங்கிக்கொள்ள வேண்டும். உருவகங்களை, அவை உலைந்துபோகாமல், அவைகொண்டுள்ள உயிர்ப்பை நமது உணர்ச்சிக்கு மாற்றிக் கொள்ளவேண்டும்.

'சூக்குமத்தில் சொற்களை விட்டெறிந்து சுட்டபழம் உதிர்க்கின்ற சோலையே' உபநிஷத். கனிகளைக் கவனமாய்ப் பொறுக்கி அவற்றின்மேல் படிந்துள்ள மணலை ஊதிவிட்டுப் புசிக்கவேண்டும். கனிகளுடன் சொற்களும் மீள்கின்றன. நாம் எச்சரிக்கையாக இல்லாவிட்டால் சொற்கள் கவண்கற்களாகி, பொட்டில் பட்டு, நமது பார்வை மயங்குவதற்கே காரணம் ஆகலாம். அப்படித்தான் ஆகியிருக்கின்றது.

நிலையாமையை எண்ணிச் சோர்வுற்று, வாழ்வில் நம்பிக்கையும் பிடிப்பும் அற்று, வெறுமையில் நின்று தள்ளாடும் உள்ளத்திற்கு, வையத்துள் வாழ்வாங்கு வாழும் வகையை விளக்கமுயலும் ஒரு நூல் இது.

வேட்கைதீராமற் பசித்திருக்கும் நசிகேதன், உடலைவிட்டுப் பிரிந்துவந்துள்ள உயிர்களில் ஒன்றல்லன். பெயரும் வடிவும் குலையாத ஒரு பிறவியாகவே யமனைச் சந்திக்கிறுன் என்பதிலிருந்தே, உயிருடன் இருக்கும் ஒருவனுடைய உணர்வின்தாபமே அவ்வாறு உருவகப் படுத்தப்பட்டுள்ளதை நாம் அறியலாம். எளிதில் விளக்கமுடியாத தத்துவக் கருத்துக்களை, உருவகங்களைக்கொண்டு கவித்வ ஆற்றலுடன் விளக்கும் நாடகப் பாங்குடைய உபநிஷத்தின் வாக்கியங்களை மந்திரங்கள் என்று கூறுவர். நிறைமொழியாளர்தம் ஆணையிற் கிளந்த மறை

மொழிகள் இவை. இந்தக் கவனம் குன்றாமல் நாம் இம்மந்திரங்களைப் புரிந்துகொள்வதில் தொடர்வோம்.

அதிதியாக ஒருவீட்டில் நுழையும் பிராமணன் தீயைப்போன்று விளங்குகிறான் என்றும் அவனைச் சாந்தப்படுத்தலே அவனுக்குரிய பாத்யம் என்றும் கூறியதை அடுத்துப் பின்வரும் மந்திரம் வருகிறது.

## 8

**ஆசா ப்ரதீக்ஷே ஸங்க$^{3}$தம் ஸூந்ருதாம்ச**
**இஷ்டாபூர்தே புத்ர பசூன்ச ஸர்வாந்**
**ஏதத்$^{3}$ வ்ருங்க்தே புருஷஸ்ய அல்பமேத$^{4}$ஸ:**
**யஸ்ய அநச்நந் வஸதி ப்$^{3}$ராஹ்மண: க்$^{3}$ருஹே.**

(குற்றறிவினனாகிய ஒருவனுடைய வீட்டில் உணவின்றி வசிக்கும் பிராமணன், அவ் ஒருவனது விருப்பு, நாட்டம், உறவு, இன்னுரைகளையும், வேள்வி, விளைத்தவை, மகவு, இன்கால்கள் அனைத்தையும் ஒருங்கே வசமாக்குகிறான்)

தனது பொது விருப்பையும், குறிப்பிட்ட நோக்கத்தையும், சார்ந்துள்ள சூழலையும் அவைபற்றிய மகிழுரைகளையும், வேட்டுச் செய்யும் வேள்வியையும், வினைமுயன்று வேண்டிய நலன்களைப் படைத்துக் கொள்ளுதலையும், இனப்பெருக்கையும், இன்பத்திற்கான பல ஊற்றுக்கால்களையும், அதிதியை உணவின்றிக் காத்திருக்கச் செய்த காலன் இழந்துவிடவேண்டியவனாகிறான் என்று இதை விளக்குகின்றனர்.

இந்த நாடக அமைப்பில் மேடையில் காணப்படுபவன், யமனுடைய வாசலில் காத்திருக்கும் நசிகேதன். மூன்று இரவுகளுக்குப் பின்னர் இப்போதே இவனது வருகையை யமனுக்கு யாரோ தெரிவித்துக் கொண்டிருக்கும் குரல் திரைக்குப் பின்னாலிருந்து வருகிறது. குரல் நசிகேதனுக்கும் கேட்கிறது. இந்தக் குரலைக் கேட்டபோது நசிகேதனுக்கு ஒரே குழப்பமாக இருந்திருக்கவேண்டும்.

தானப் பொருளாக வழங்கப்பட்டு யமனிடம் வந்துற்ற தன்னை, உபசரணைக்குரிய ஒரு அதிதிவந்து காத்திருப்பதாக வன்றோ யமனிடம் அறிவிக்கிறார்கள். வழக்கமாக யமபுரிக்கு வருகின்ற உயிர்களைப்போல் அல்லாமல் ஒரு முழுப் பிறவியாக வந்துற்றபடியால் அப்படி மதிக்கிறார்களோ! இருக்கலாம். கன்யா தானத்தில் ஒருவன் பெறுகின்ற பெண்ணை, சாதாரணமான ஒரு பொருளாகக்கொள்ளாமல் ஸஹதர்மிணியாக ஏற்றுப் போற்றுவதில்லையா? எனவே நசிகேதனும் ஒரு அதிதியாகப் போற்றப்படுவது பொருத்தம்தான்.

ஆனால் இவனது வருகையை யமன் முன்கூட்டி அறிந்திருக்கவில்லையே. இதோ இப்போதுதானே அந்தச் செய்தியே அவனுக்கு அறிவிக்கப்படுகிறது. அப்படியிருக்க உணவின்றி அதிதியைக் காக்க வைத்த குற்றம் யமனை எப்படிச்சாரும்?

தான் இல்லாதபோதும் வீட்டுக்கு வருகின்ற அதிதியை உபசரிக்குமாறு வீட்டில் உள்ளாரிடம் திட்டம் செய்துவைப்பதும் கூட ஒரு கிரஹஸ்தனுடைய கடமையாக இருக்கலாம். ஆனால், தலைவன் இல்லாத வீட்டில் கௌரவமான எந்த அதிதிதான் உணவை ஏற்கமுடியும்? எப்படியும் யமன் குற்றவாளியாகமுடியாது. அவனது வீட்டில் அதிதி உணவின்றியிருந்ததற்கு கிரஹஸ்தனுக்குப் பொறுப்புண்டு என்று வைத்துக்கொண்டாலும் அது எண்ணிச் செய்த பிழையாகாது, நேர்ந்துவிட்ட ஒரு பிழையாகவே இருக்கும்.

அதற்கு, தனது பேறுகள் அனைத்தையும் ஒருவன் இழக்கநேரிடும் என்பது பொருத்தமான ஒன்றாயில்லை. அதுவும் அதிதியே அப்படித் தண்டிப்பான் என்பது, அதிதிக்கு ஒரு அபவாதமேயன்றி, அவனது பண்பார்ந்த, உபசரிக்கத்தக்க உயர்வுக்குச் சற்றும் பொருத்தமில்லை.

நமக்குத்தான் இப்படியெல்லாம் குழப்பம் ஏற்படுகிறதேயன்றி, நசிகேதன் சிறிதேனும் குழப்பமுற்றான் என்ற சிறு குறிப்பும் காணப்படவில்லை. ஏனெனில் வெறும் பிதற்றல்கள் இந்த மந்திரத்தின் பொருளன்று. நசிகேதன் இந்தச் சொற்களின் மூலம் தெளிவுகளையே பெறுகிறான்.

நசிகேதன் அதிதியாகவும், காலன் கிரஹஸ்தனாகவும் வருகின்றனர். எனவே இந்த மந்திரத்துள் வரும் செய்திகள் பின் வருமாறு அமைகின்றன.

குற்றறிவினனாகிய யமனுடைய வீட்டில் உணவின்றி இருந்த நசிகேதன், யமனுடையதான அனைத்தையும் தன் வசமாக்குகிறான்.

அல்பமேதஸ: என்ற அடைமொழி காலனைப்பற்றியதாக இருக்கிறது. இதற்கு இழிந்த மதியினன் என்று பொருள் கொண்டமையால் அதனை ஒட்டி, நசிகேதன் உணவின்றியிருந்த காரணத்தால் யமனை தோஷம் தொடர்ந்ததாகவும், அதனால் அவனது அனைத்தும் நசிகேதனால் நாசமாக்கப்படுகிறதென்றும் பொருள் திசை திரும்பிவிட்டிருக்கிறது. இதற்கு இணக்கமாக வ்ருங்க்தே -- வசமாக்குகிறான் என்பதை - அதிதி யமனிடமிருந்து பறித்துக்கொண்டு, அவனுக்கு இல்லாமற் செய்துவிடுகிறான் என்றும் கொண்டு கூட்டிப் பொருள்செய்யப்பட்டிருக்கிறது.

மேதஸ் என்பது அறிவு. அல்பமேதஸ் என்பது முற்றுப்பெறாத குறை அறிவு என்று ஆகும். மகாமேதஸ் என்பது அறிவின் பெருக்கம். மயர்வற மதிநலம் உடைமை. அல்பமேதஸ் வரம்புக்குட்பட்டது. காலன் இழிந்த மதியினன் அன்று. குறை அறிவினன். எப்படி?

அறிவு என்பது அறியப்படுவது. ஒன்றை அவ்வாறு அறிவதற்கு அதன் பரிமாணங்களே காரணம். எதுவும் முப்பரிமாணங்கள் கொண்டவையாக இருந்தே துலங்குகிறது. அப்படி அது துலங்குவதற்கு அதற்குரிய கால நியமமே அடிப்படை. தோற்றம் மறைவு ஆகிய இரு நிகழ்ச்சிகளுக்கு இடைப்பட்ட துலக்கமே அறியத்தக்க எதுவும். எனவே ஒவ்வொரு அறிவும் காலக்கூறே. பருப்பொருள்கள் மட்டுமல்லாது, எண்ணத்தின் சலனங்களும் இவ்வாறு கால நியமம் உடையனவேயாகும். நாம் நமது உள்ளத்தில் சேர்த்துள்ள அறிவு முழுவதும், இப்படிச் சிறுச்சிறு அறிவுகளின் தொகையே. அதாவது காலக் கூறுகளின் சேர்க்கையே.

மனித வாழ்வின் அகப்புற இயக்கங்களும் அவற்றின் விளைவுகளும் காலனது உடைமைகளே என்று இந்த மந்திரத்துள் கூறப்பட்டிருக்கும் பட்டியலைக்கொண்டு சிறிய அறிவுகளின் உடைமையாளனே காலன் என்பதை உணரவேண்டும். காலாதீதமானதே முற்றறிவு - பேரறிவு - முழு அறிவு ஆகையால் அதனை அடையும் வரையிலான எத்துணை அறிவுப்பெருக்கமும் கால வரைக்குள்ளிட்ட சிறு சிறு அறிவுகளின் தொகுப்பே. எனவே காலன் குற்றறிவினன். அல்பமேதஸ: என்பதை அறிவின் பான்மையைக் குறிப்பிடுவதாகக் கொள்ளாமல், அறிவின் வரம்பைக் குறிப்பதாகவே கொள்க.

குற்றறிவினனாகிய யமனுடையவை என்று கூறப்பட்டுள்ளவை யாவும் நமது வாழ்வின் அகப்புற இயக்கங்களாக, நாம் அறிந்துள்ள நமது அறிவின் பரப்பிற்குட்பட்ட நமது வாழ்வாகவே இருப்பன.

ஆசா: விருப்பம்: சித்த விருப்பு வெறுப்புக்களின் வழி செயல்படும் உள்ளம் தனது சுவையுணர்ச்சிக்கு ஏற்ற ஒன்றின்மீது கொள்ளும் பொதுவான பற்றுதல்

ப்ரதீக்ஷா: நாட்டம்: குறித்த ஒன்றை அடைய விருப்புற்று அதைப் பெற விழைந்திருத்தல்

ஸங்கதம்: உறவு: தன்னோடு இணக்க முற்ற சூழலில் பொருந்தித் தொடர்புற் றிருத்தல்

ஸௌந்ருதம்: இன்னுரை: இன்ப நினைவு களில் மகிழ்ந்து உரையாடியிருத்தல்.

இவையெல்லாம் உள்ளத்தே நிகழும் நெகிழ்ச்சிகளே. இவையே நம்மை ஊக்கு வித்து நமது வினைத்திறமாக விளைவதே பின்வரும் நான்கும்.

இஷ்ட: வேள்வி: நாடும் ஒன்றை அடைய விரும்பி, அதற்கான வினை முயன்றிடுதல்

பூர்த: விளைத்தல்: பயன் தரும் மார்க்கங் களைப் படைத்துக்கொள்ளல்

புத்ர: மகவு: மகிழ்வால் விளைந்த நன்மகப் பேறு.

பசுக்கள்: இன்திறம்: துய்த்தற்கான துறை பல காணல்.

காட்சியும் கருத்தும், வினையும் விளைவும் கால நியமத்துக்கு உட்பட்டுத் தோன்றி மறையும் துலக்கங்களே என்பதை நசிகேதன் புதிதாக உணர வேண்டி யிருக்கவில்லை. எனவே இவை காலன் உடைமைகளே என்பது சரிதான். ஆதியில் அனைத்தும் மரண மூடியால் கவியப்பட்டிருந்தது என்ற செய்தி பிரஹ தாரண்ய உபநிஷத்தில் வருகிறது. அதா வது தோற்றம் மறைவு இரண்டுக்குமே காலன் அதிபதியாகிறான். துலங்கும் ஒன்று மறைந்தபின் அங்கு வெறுமை நிலவுகிறது. அதேபோன்று துலங்கும் ஒன்று தோற்ற முறுவதற்கு முன்பும் அங்கு வெறுமையே நிலவியது. இன்மையேமரண மென்று கொண்டால் மரணத்திலிருந்தே தோற்றமும் வந்திருக்கிறது என்பது தெளிவு. காலக் கடலில் வெடித்த மொக் குள் போன்று எந்தத் தோற்றமும் துலங்கு கிறது.

எனவே யமனை மரணம் என்று கொள் வதைக் காட்டிலும், தோற்றம் மறைவு இரண்டுமே கால நியமங்களே என்று கொள்ளுதல், காலத்தைப் பற்றிய சரியான கருத்தாகும். ஆக, துலங்குவதனைத்தும் காலன் அருளியவையே. அதாவது காலம் இழைக்கும் கோலங்களே.

ஆனால் இவையாவும் காலனிடமிருந்து தனக்கு வசமாகி விடுவதாக எப்படிக் கூறுகிறார்கள் என்று நசிகேதன் எண்ணுகிறான். உணவின் இருந்தமையால் நசிகேதனுக்கு காலனுடையவை யான அனைத்தும் வசமாகிறது

என்பதல்லவோ இம்மந்திரத்தின் செய்தி.

வயிற்றுக்குச் சோறில்லாமல் பட்டினி யாகக் கிடந்தான் என்று கொள்வது சரி யன்று. வயிற்றுப்பசியும் விருந்தும் மானிட உலகத்து விவகாரங்களேயன்றி தெய்வங் களின் பாஷையில் இவற்றிற்குப் பொருள் கிடையாது. எனவே நசிகேதன் உண வின்றியிருந்தான் என்பதை, வேட்கை மீதூர நின்ற உணர்வின் தாபம் என்றே பொருள் கொள்க.

அப்படி வேட்டிருந்த காரணத்தினால் காலனுடைய உடைமைகள் தனது உடைமைகளே ஆகும் நிலை நசிகேத னுக்கு உண்டாயிற்று.

பொருள்களே தத்தமக்கு உரிய பரிமாணங்களைக் கொண்டிருக்கின்றன வென்றும், தமக்கே உரிய நிலையாத் தன்மையாலேயே அவை பொருளற்றவை யாயின என்றும் இதுகாறும் கருதிவந்த காரணத்தினால், அவற்றில் நம்பிக்கையும் பிடிப்பும் அற்றதாய், அவையனைத்தையும் நீத்துவிட்ட வெறுமையின் இடைகழியில் அலமந்து நிற்கிறது உள்ளம். இதுவே பய னற்ற பசுக்களை வாஜச்ரவஸர் கொடுத்து விட்ட வரலாறு.

காலக் கூறுகளைப் பொருட்படுத்தாது விலக்கிய உள்ளத்தில் காலமென்ற பெருங் கருத்தைத் தெளிய வேண்டுமென்ப தல்லவோ இப்பொழுது உணர்வின் வேட்கையாக (நசிகேதனுடைய உபவாச

மாக) இருக்கிறது. இந்த வேட்கைக்குக் கிடைத்துள்ள விடைதான், காலனுடைமைகள் உண்மையில் இனி நசிகேதனுக்கே உரியனவாகின்றன என்பது. அதாவது எல்லாக் கோலங்களும் கால நியமமே யாயினும் அவற்றை புறக்கணிக்காமல் ஏற்றுக்கொள்வதன் மூலமே அவற்றின்மீது தனக்கு ஆட்சி ஏற்படும் என்பதே இதன் மூலம் உள்ளுணர்வில் பெறப்படும் தெளிவு.

அதாவது, எந்த ஒன்றின் துலக்கமும் (காலனுடைமைகள் என்பது) தெளிவை நாடாத வரையிலும்தான். தெளிவு பெறும்போது

> எல்லாத் துலக்கங்களும், காலனுடையனவாய் இருந்த யாவும், புறக்கணியாது ஏற்றுக்கொள் வேண்டியவையே

என்பது புலனாகி விடுகிறது,

இப்பொழுது உணர்வுக்கு (நசிகேதனுக்கு) கிடைத்துள்ள தெளிவு என்னவென்றால்

1. தோற்றம் மறைவுக்கு இடைப்பட்ட துலக்கமே எப்பொருளும்.

2. காலம் என்ற வரம்பிலேயே அப்படி ஒன்று தோன்றியும் துலங்கியும் மறைந்தும் போகிறது.

3. தோற்றம் மறைவுகளுக்கிடைப்பட்டதான அகப்புற வாழ்வின் அனைத்தும் இப்படிக் காலம் விளைக்கின்ற கோலங்கள்.

4. உய்த்து உணரும்போது (உணவின்றி வேட்டிருந்தபோது) காலத்தின் கோலங்கள் (யமனுடைய அனைத்தும்) உண்மையில் உள்ளத்தின் படைப்பே (அதிதியின் வசமாகிவிடுகின்றவையே)

பொருள்களுக்கு உண்மையில் எவ்வித பரிமாணங்களும் கிடையாது. பரிமாணங்கள் யாவும், காலம் உட்பட நமது உள்ளப் பரப்பில் துவண்டலையும் நிழல்களே. இப்பிரபஞ்சத்தை நிலையற்றதென்று காண்பது சரியாயினும் அதனை விலக்குவது நகைச்சுவையேயாகும். ஏனென்றால் அப்படி விலக்கும் நாமும் நமது உணர்ச்சியும், உள்ளமும் நிலையற்றவர்களே. நிலையாமையை மனிதன் அறிவது அவற்றை ஒதுக்குவதற்கு அன்று. அவற்றுடன் தனது தொடர்பை இங்கிதப் படுத்திக்கொள்ளவேயாகும். பிறவியுள்ள வரையிலும் பிறவும் அதன் பகுதியே. புறக்கணிப்பதைக் காட்டிலும் அவற்றைப் புரிந்துகொள்வதே வாழ்வு.

நிலையற்றது என்று உலகை உதறிய உள்ளத்திற்கு, உணர்வு, தான்பெற்ற தெளிவை வழங்க, உலக வாழ்வை, அதனில் ஒட்டாது ஆனால் அதில் உற்று வாழ, இனி நசிகேதன் ஊர் திரும்பவேண்டும். அடுத்த காட்சியில் அவன் யமனிடம் கேட்கப்போகும் முதல் வரமே இதுதான்.

## 9

> திஸ்ர: ராத்ரீ: யத் அவாத்ஸீ: க்$^{3}$ருஹே
> மே அநச்நந் ப்$^{3}$ரஹ்மந் அதிதி: நமஸ்ய:
> நமஸ்தே அஸ்து ப்$^{3}$ரஹ்மந் ஸ்வஸ்திமே
> அஸ்து தஸ்மாத் ப்ரதி த்ரீன் வரான் வ்ருணீஷ்வ.

(மூன்று இரவுகள் எதற்காக இருந்தீரோ என் வீட்டில் உணவின்றி பிராம்மண அதிதியே, போற்றற்குரியோய், உமக்கு வணக்கம் ஆகுக. அதனால் எனக்கு நலம் உண்டாகட்டும். ஈடாக மூன்று வரங்களை அடையும்).

மூன்று இரவுகள் நசிகேதன் பட்டினியாய் இருந்திருப்பதாக யமன் கூறுகிறான். ஏதோ ஒரு நோக்கத்துடனேயே அவன் அவ்வாறு இருந்தான் என்றும் தெரிகிறது. அது மிக உன்னதமான நோக்கமாகவும் இருக்கிறது. அதன் பொருட்டே அதிதி வணங்கத்தக்கவனும் ஆகின்றான் யமனுடைய மதிப்பில். அதற்காகவே அவனைத் தான் போற்றுவதாகவும் கூறுகிறான். அந்த நோக்கம் ஈடேறும் பொருட்டு

அதற்கு உரியதாக மூன்று வரங்களை வழங்கவும் முன்வருகிருன். அதனுல் தனக்கு நலன்கள் உண்டாகுமென்றும் யமன் நம்புகிருன். அதை அருளுமாறும் நசிகேதனை வேண்டுகிருன்.

இப்படி இந்த மந்திரத்தைக் காண வேண்டும். இதை விடுத்து, தனது வாசலில், தனது கவனக்குறைவால் மூன்று இரவுகள் பட்டினியாக இருந்த அதிதியை சமாதானப்படுத்த அவனது விருப்பம் போல் மூன்று வரங்களை வழங்கிவிடுவதன் மூலம் ராஜி பேசுகிருன் என்று மேலெழுந்த வாரியாகப் பொருள் செய்யக் கூடாது.

நசிகேதன் மூன்று இரவுகள் பட்டினியாய் இருந்தான் என்று தெரியவருகிறது. பகல்கள் என்னவாயின என்று தெரியவில்லை. உலகக் கணக்குப்படியான இரவு, **பகல், நாள் என்ற** காலக்கணக்குகளை, **காலத்திற்கே அதிதேவதையான** யமனுடைய பஞ்சாங்கத்தில் நாம் தேடுவது பொருளற்றதாகும். நாளென ஒன்று போல் நமக்குக் காட்டி உயிர் ஈறும் கூற்றுவன் ஊரில் நமது நாட்கணக்கு நகைப்புக்குரியதாகும். எனவே இங்கு மூன்று இரவுகள் என்பது நசிகேதன் தனக்குத்தான் வேட்ட தெளிவு பெருத மயலில் ஆழ்ந்திருந்த முத்திறங்களை விளக்குவதாகும்.

நிலையற்ற உலகைப் பயனற்றதென்து நீத்தபிறகும் நசிகேதன் என்ற பெயரும் வடிவும் மாருத நிலையில் வேட்கைத் தீயுடன் நிறைந்த உள்ளுணர்வாகவன்றே நிற்கிருன். தெளிவு பெருமல் அவன் இருக்கின்ற மூன்று அவதிகள் அவனது உடலும் உள்ளமும் உயிருமாகும்.

உலகில் பொருளும் காட்சியும் நிலையற்றனவென்று அவற்றை நீக்கிய பிறகும் அவனுக்கு உடல் வாழ்வு இருந்துகொண்டிருக்கிறது.

உலக ஆசையும் பற்றும் நிலையற்றதென்று கருதி அவற்றை நீத்த உள்ளம் அந்த உடலில் இன்னமும் இருக்கிறது.

உடலைவிட்டு உயிர் எப்போதும் பறந்துவிடும் என்று அறிந்து வாழ்வில் பற்றுவிட்டுப் போனபிறகும் அவனது உடலில் இன்னமும் மூச்சு இழைந்து கொண்டிருக்கிறது.

உடல் உயிர் உள்ளம் மூன்றும் நிலையாமைக்கு அலந்து நிலைபேற்றை நாடினவேயன்றி தெளியாத மயலிலேயே மேற்சொன்ன சுலோகத்தில் வந்த செய்திகளைப் பெறும் வரையில் ஆழ்ந்திருந்தன. இதோ தெளிவு பெற்றுவிட்டபடியால் அவை விழிப்புற்றன.

மயலில் வீழ்ந்திருந்து இதோ தெளிவு பெற்ற உடல் உள்ளம் உயிர் இயக்கங்கள் புதுவாழ்வில் இயங்குதல் வேண்டுமென்பதே உணர்வுக்கு அறிவுறுத்தப்படுவது அதுவே யமன் தருவதாகக்கூறும் மூவரங்கள். இவை மேற்சொன்ன விளக்கத்தையே பேசுகின்றன என்பதற்கு நசிகேதன் கேட்கும் வரங்களின் வைப்பு மறையே சான்ருகும்.

முன்னர் நிலையற்றதென்று நீத்த உடல்வாழ்வை மீண்டும் இந்தத் தெளிவுடன் வாழவேண்டுமென்பதே நசிகேதனுடைய முதல் ஊக்கமாக இருக்கிறது.

பின், நிலையற்றதென்று நீத்த உள்ளத்தைத் துணைக்கொண்டு இப்போது அழிவு இறுதி மூப்பு நரைபசி தாகமற்ற ஸ்வர்க்கம் செல்லும் பாதையை அறிய விழைகிருன்.

பின், உயிர் உடலைவிட்டு நீங்கிய பிறகு அது என்னவாகிறது என்பதை அறிய விழைகிருன்.

உடலாலும் உள்ளத்தாலும் உயிராலும் தெளிவுபெறுகின்ற உணர்வின் விழிப்பு இதோ சாதிக்கப்பட்டுள்ளது.

[தொடரும்]



## அமுத வாக்கு

சாதிக் கொடுமைகள் வேண்டாம் - அன்பு
தன்னில் செழித்திடும் வையம்;
ஆதரவுற்றிங்கு வாழ்வோம் - தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்.



Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Trichy-2. Annual Subscription Rs. 10